சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு "

| மலர் ரு | ஆங்கீரச ஆண்டு வைகாசித் திங்கள் 1932 ஸூ மேமீ | இதழ் ரு |
| --- | --- | --- |

## சைவ சமயம்

[பத்திராசிரியர்]

[குறிப்பு :—இது மன்னார்குடியில் 1-5-32-ல் கௌமாா குருகுலத்தில் யாம் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம்.]

**சமயம் என்றால் என்ன ?** :—ஒவ்வொரு உயிரும் தனது வாழ்க்கையின் லக்ஷியமாகக் கொண்டுள்ளது இன்பம் என்ற பொருளையே. ஏனைய பொருள்களும் செயல்களும் இந்த முடிவான லக்ஷியத்துக்கே சாதனங்களாக உள்ளன. இந்த இன்பம் சிற்றின்பம் பேரின்பம் என இருவகைப்படும். சிற்றின்பமாவது உலகத்திலுள்ள பொருள்களினால் உயிரினிடத்து உண்டாகும் பற்றையே துணையாகக்கொண்டு ஏற்படுவது. இவ்வுலகத்துப் பொருள்களும் உயிரின் பற்றும் மாறுகின்ற தன்மையுடையன. ஆகையால் சிற்றின்பம் எப்போதும் மாறும் சுபாவமுடையது. ஆகையால் பெருகவும் சிறுகவும், நிலைக்கவும் நிலை தவிரவும் செய்யுந்தன்மை சிற்றின்பத்துக்கு இயல்பாக உண்டு. ஆனால் பேரின்பமோ கடவுள் என்ற பொருளை உயிர் பற்றிக்கொள்வதால் உண்டாவது. கடவுள் என்றும் மாறாததும் நிலையுள்ளதும் எல்லாவற்றிற்கும் பெரியதுமான இன்பத்தை எப்போதும் அநுபவிப்பவர். ஆகையால் அவரைப் பற்றுவதால் உண்டாகும் பேரின்பமும் அவ்வாறே இருக்கும். சிற்றின்பத்துக்குச் சாதனமாகவுள்ள அறிவைத் தருவன உலக அறிவியல் நூல்கள் (Sciences). பேரின்பத்துக்குச் சாதனமாகவுள்ள அறிவைத் தருவன சமய நூல்கள். எனவே சமயத்தைப் பேரின்ப அறிவியல் என்னலாம்.

**சைவ சமயம்** :—மக்கள் தன்மை, பழக்க ஒழுக்கங்கள், அறிவு, அநுபவமுதிர்ச்சி முதலியவைகட்குத் தக்கவாறு சமயங்களும் பலவுள்ளன.

இவற்றுள் எல்லாவற்றிலும் சிறந்ததும் மற்றெல்லாச் சமயங்களையும் தன்னுள் ஏணிப்படிகள் போல அடக்கியுள்ளதும் மிகுந்த பரிசுத்தம், அறிவு, அருள் முதலியவற்றை அங்கங்களாகக் கொண்ட பேரின்பத்தைத் தருவதுமாகிய சமயம், சைவ சமயமெனப்படும். இதிலும் பல பிரிவுகளுள்ளன. இவற்றுட் சிறந்தது சைவ சித்தாந்தம் எனப்படும். இதையே இங்கு நான் எடுத்து விவரிப்பேன். சைவம் என்று நான் கூறுமிடத்திலெல்லாம் சைவ சித்தாந்தம் என்றே நீங்கள் எண்ணிக் கொள்ளவேண்டும்.

சைவத்தின் அடிப்படை :—சைவ சித்தாந்தத்தின் அடிப்படையான கொள்கை ஒன்றே. அதை ஒரே வாக்கியத்தில் சொல்லிவிடலாம். ஆதியும் அந்தமும் இல்லாத பொருள்களான கடவுள் (பதி), உயிர் (பசு), உலகம் (பாசம்) என்ற மூன்றினுள் உயிர் தன்னை இயல்பாகக்கட்டிப் பிணைத்துள்ள பாசத்திலிருந்து கடவுளின் திருவருளைத் துணையாகக் கொண்டு விடுபட்டு கடவுளின் திருவடியில் பேரின்பத்தை யடைதல் என்பது தான் சைவ சித்தாந்தத்தின் அடிப்படையான உண்மை. இவ்வரிய வுண்மையை விளக்குவதற்காகவே ஆயிரக் கணக்கான விவர உண்மைகள் ஏற்பட்டுள்ளன. இனி இவ்விவர உண்மைகள் சிலவற்றைக் காண்போமாக.

முப்பொருளுண்மை :—அண்ட சராசரங்களிலுள்ள எல்லாப் பொருள்களையும் மூன்று பிரிவுகளுள் அடக்கி விடலாம். அப்பிரிவுகள் பதி (கடவுள்), பசு (உயிர்கள்), பாசம் (உலகம், மலங்கள்முதலியன) என்பன. இவ்வாறு பிரிப்பதற்கு முப்பொருளுண்மை என்று பெயர். இம்மூன்றும் ஆதியும் அந்தமுமில்லாமல் என்றும் உள்ளன வென்பது சைவ சித்தாந்தத்தில் முக்கியமான ஓர் உண்மை.

கடவுள் :—கடவுள் சைவத்தில் சகுணக் கடவுளாகவும் நிர்குணக் கடவுளாகவும் விளங்குகிறார். சகுணக் கடவுள் எட்டு குணங்களை யுடையவராய் உலகத்தில் விறகில் தீயைப் போலவும் எள்ளுக்குள் எண்ணெய் போலவும் இருக்கிறார் (Immanent). நிர்குணக்கடவுள் உருவம் தொழில் குணம் முதலியவற்றில் எவையுமின்றி எல்லாவற்றிற்கும் புறம்பாக நிற்கிறார் (Transcendental). உயிர்கள் முதன்முதலாக சகுணக்கடவுளின் இலக்கணத்தை யறிந்து வழிபட்டபிறகே நிர்குணக் கடவுளை யறியவேண்டும்.

கடவுளின் எண் குணங்களும் ஐந்தொழில்களும் :—சகுணக் கடவுளின் எட்டுக் குணங்களாவன :—(1) தன்வயத்தன் ஆதல், (2) தூயவுடம்பினனாதல், (3) இயற்கை யுணர்வினனாதல், (4) முற்று முணர்தல், (5) இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், (6) பேரருள் உடைமை, (7) முடிவில் ஆற்றலுடைமை, (8) வரம்பில் இன்பமுடைமை என்பனவாம். இக்குணங்களையுடைய கடவுள்தான் உலகத்துக்கு நாயகனாக இருக்கும் தகுதியுடையவர்; நாயகனாகவே இருக்கிறார்; உயிர்களுக்கும் தலைவனாக விளங்குகிறார். எல்லாத் தொழில்களையும் நடத்துபவரும் இவரே. இவரது தொழில்கள் ஐந்து வகைப்படும். இவை சிருஷ்டி (Evolution), ஸ்திதி (Existence), சம்ஹாரம் (Transformation), திரோபவம் (Involution), அநுக்ரஹம் (Manifestation of grace) என்பன. இத்தொழில்களை நடத்த இவருக்கு

இச்சை கிரியை ஞானம் (Will, force, wisdom) என்ற மூன்று வகையான சக்தி துணைசெய்கிறது. உலகத்தில் கடவுள் சக்தியோடு பிரிக்கமுடியாத தன்மையாகக் கலந்து தொழில் செய்கிறார். சக்தியோடு கலந்த சிவம் என்ற இக்கடவுளே கோயில்களில் சிவலிங்க உருவமாக வணங்கப்படுகிறார். இவ்வாறு சக்தியோடு கூடிய கடவுள் ஒன்பது தொழிற்படு கடவுளர் மூலமாக உலக காரியங்களை நடத்துகிறார். இவ்வொன்பது கடவுளருள் ஒருவரையே தலைவராகச் சில சமயங்கள் கொள்ளும். என்றாலும் அச்சமயத்தவர்கட்கும் அவரவர் தகுதிக்கேற்ப அருள் செய்பவர் முழுமுதற் கடவுளே யாவார்.

கடவுள் நிமித்த காரணர், சத்காரியவாதம்:—ஒவ்வொரு காரியத்துக்கும் மூன்று வகையான காரணங்கள் உண்டு. அவை முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம் எனப்படும் (Material, instrumental, and efficient causes). ஒரு மண் பானையைச் செய்வதற்கு மண் தேவை; கோல் சக்கரம் முதலிய ஆயுதங்கள் தேவை; குயவனும் தேவை. ஆயுதங்களை அறிவோடு உபயோகித்தால் குயவன் மண்ணைப் பானையாக்குவான். இங்கே மண் முதற்காரணம்; கோல் சக்கரம் துணைக் காரணம்; குயவன் நிமித்த காரணம். இஃதேபோல் மாயையை முதற்காரணமாகவும் சக்தியைத் துணைக் காரணமாகவும் கொண்டு கடவுள் நிமித்த காரணராக இருந்து உலக காரியங்களை நடத்துகிறார். இந்த முறையில் உலக காரியத்துக்குக் காரணங் கூறுகிறதற்குச் சத்காரிய வாதம் என்று பெயர். சைவ சித்தாந்தத்தின் முக்கியமான கொள்கைகளுள் இதுவும் ஒன்று. வேறு பல சமயங்களில் கடவுள் முதற் காரணராகவும் துணைக் காரணராகவும் கருதப்படுகிறார். ஆனால் சைவத்தில் அவ்வாறு அவரை எண்ணுவதில்லை, அவ்வாறு எண்ணினால் முப்பொருளுண்மைக்குப் பங்கம் உண்டாகும்; அறிவியலுக்கும் பொருந்தாது. பௌதிக சாத்திரத்தில் (Indestructibility of matter) உள்ளது போகாது என்ற உண்மை ஒன்றுண்டு. உள்ளது போகாது இல்லது வாராது என்பதே சத்காரிய வாதம். கடவுள் ஒன்றுமில்லாத வெறும்பாழிலிருந்து உலகங்களை உண்டாக்கினார் என்பது சத்காரியவாதத்துக்கும், பௌதிக சாத்திர உண்மைக்கும், சாதாரண நம்பிக்கைக்கும் முரணாக இருக்கும். சைவம் அவ்வாறு கூறவில்லை. சூக்ஷ்மமாக உள்ள பொருளிலிருந்து ஸ்தூலமான உலகத்தை வருவிப்பதுதான் சிருஷ்டி யென்றும் அவ்வாறே ஸ்தூலத்தைப் பிரித்து சூக்ஷ்மத்துள் அடக்குவதுதான் சம்ஹாரம் என்றும் சைவ சமயம் கூறுகின்றது.

சிவத்தின் இயல்பு:—நாம் உலகத்தோடு தொடர்பு வைத்துள்ள வரை இந்த உலகத்தோடு தொடர்புடைய சகுணக் கடவுளை வணங்கவேண்டும். நாம் உலகத் தொடர்பை விட்டால் உலகத் தொடர்பில்லாத நிர்குணக் கடவுளை வழிபடலாம். இவ்வாறு சகுணமாகவும் நிர்குணமாகவும் கூறப்படும் கடவுளுக்குத்தான் சைவ சமயம் "சிவம்" என்று பெயர் கொடுத்திருக்கிறது. இந்நிலைகட்குச் சொரூபநிலை தடத்தநிலை என்றும்பெயர். இவை ஒன்றற்கொன்று மாறுபட்டதுபோலத் தோன்றுவதால் இவ்விரண்டு தன்மையிலும் நிற்கும் கடவுளை வருணிக்கும்போதும் ஒன்றோடொன்று மாறு

பட்ட சொற்கள் அடுக்கடுக்காக வரும். உதாரணமாகக் கடவுளிலக்கணங் கூறும் சிவஞான சித்தியார் முதற் சூத்திரத்தின் கடைசி செய்யுள்,

"சிவன் உருஅருவும் அல்லன் சித்தினோடு அசித்தும் அல்லன்
பவமுதல் தொழில்கள் ஒன்றும் பண்ணிடு வானும்அல்லன்
தவமுதல் யோகபோகம் தரிப்பவன்அல்லன் தானே
இவை பெறஇயைந்தும் ஒன்றும் இயைந்திடா இயல்பினானே"

என்று சிவபெருமானை வர்ணிக்கிறது. இம்மட்டில் கடவுளின் இலக்ஷணத்தைப்பற்றிய பேச்சை நிறுத்திக்கொண்டு இனி உயிர்களின் இலக்ஷணத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

உயிர் அல்லது ஆன்மா :—உயிர் கடவுளைப்போலவே ஆதியும் அந்தமுமில்லாத பொருள். கடவுள் உயிர்களை உண்டாக்குவதில்லை; உடம்புகளையும் மற்றவைகளையுமே உண்டாக்குகிறார். உயிர் பிராணவாயு, அறிவுகள், பொறிபுலன், கரணங்கள் முதலியவற்றிற்கு வேறாகவுள்ள பொருள். மேற் கூறியவைகளெல்லாம் கருவிகள் அல்லது தத்துவங்கள் எனப்படும். உள் நிலைக்கருவிகள் முப்பத்தாறுக்கும் தத்துவங்கள், புற நிலைக்கருவிகள் அறுபதுக்கும் தாத்விகங்கள் என்று பெயர். இரண்டையும் சேர்த்துப் பொதுவாகத் தொண்ணூற்றாறு தத்துவங்கள் என்று சாதாரணமாகச் சொல்வதுண்டு. இந்த தத்துவங்களை யறிந்து அவற்றிற்கு வேறாக உயிர் நிற்க வேண்டும். இந்த விவரங்களெல்லாம் கட்டளை நூல்களில் கிடைக்கும். ஜாக்கிரதை, ஸ்வப்னம், சுஷுப்தி, துரியம், துரியாதீதம் என்று ஐந்து அவஸ்தைகளும் ஆன்மாவுக்கு உண்டு (Five stages of consciousness). இவற்றின் கீழால வஸ்தை, மத்தியாவஸ்தை, நின்மலா வஸ்தை, கேவலாவஸ்தை, சகலாவஸ்தை, சுத்தாவஸ்தை, காரணாவஸ்தை, காரியாவஸ்தை என்ற பாகுபாடுகளும் உண்டு. இவைகளைக் கட்டளை நூல்கள் விரிவாகக் கூறும். உயிர்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப் படும். ஆணவம் என்ற ஒரு மலமுடையார் விஞ்ஞான கலர், ஆணவம் கன்மம் என்ற இருமலமுடையார் பிரளயாகலர், ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலமுடையார் சகலர்.

ஆன்மா சதசத்து :—செம்பில்களிம்பு இருப்பதுபோல் இயல்பாகவே உயிரில் பாசம் இருக்கிறது. உலகத்தைச் சார்ந்துள்ளபோது இப்பாசம் உயிரை நன்றாய்ப் பற்றிக்கொள்ளும். உலகத்தைச் சாராமல் கடவுளைச் சார்ந்துள்ளபோது பாசம் விலகும். இவ்விரு தன்மையாகவும் உயிர் இருப்பதால் இதற்கு சதசத்து என்று பெயர். அதாவது அசத்தாகிய உலகத்தைச் சார்ந்தால் அசத்தாகவும் சத்தாகிய கடவுளைச் சார்ந்தால் சத்தாகவும் ஆன்மா விளங்குவதால் சத்+அசத்து=சதசத்து என்று ஆன்மாவுக்குப் பெயர் ஏற்பட்டது. இம்மட்டில் உயிர்களைப்பற்றிய ஆராய்ச்சியை நிறுத்திக்கொண்டு இனிப்பாசத்தைப்பற்றிச் சிறிது கவனிப்போம்.

பாசம் (மலம், உலகம்):—பாசம் என்பது உயிர்களைக் கட்டிக் கடவுளையும் பேரின்பத்தையும் அடைய வொட்டாது குறுக்கே நிற்கும் தடைப் பொருள். இதை ஐந்து கூறுக்கி ஆணவம், கன்மம், திரோதாயி, சுத்த

மாயை, அசுத்தமாயை என்ற ஐந்து மலங்களென்றும் கடைசி மூன்றையும் மாயை என்ற ஒரு கூற்றில் அடக்கி, மும்மலங்களென்றும் கூறுவது வழக்கம். இம் மும்மலங்களுக்கும் மூல காரணமாகவும் ஒழிப்பதற்கு மிகவும் கஷ்டசாத்தியமாகவும் உள்ளது ஆணவமலம். ஆகையால் இதையே மூல மலம் என்றும் பொதுவாக மலம் என்றும் கூறுவதும் வழக்கம். இனி இம் மலங்களாகிய பாசத்தின்தொழிலைக் கவனிப்போம்.

பாசத்தின் தொழில்:—சுத்தமாயை விஞ்ஞான பிரளயாகலர்க்கு தநு கரண புவன போகங்களாயிருக்கும். தநு என்றால் உடம்பு, கரணம் என்றால் உடம்புக்கேற்ற இந்திரிய முதலிய சாதனங்கள், புவனம் என்றால் உலகம், போகம் என்றால் உடம்பால் செய்யப்படும் தொழில். இவ்வாறே அசுத்தமாயை சகலர்க்கு தநுகரண புவன போகங்களாயிருக்கும். திரோதாயி இவைகளிலேயே ஆன்மாவை அழுந்தியிருக்கும்படி மயக்கும். கன்மம் ஆன்மாக்களுக்குப் பிறப்பு இறப்புக்களுக்குக் காரணமாயிருக்கும். நல்வினை தீவினைகளுக்கேற்ப தநுகரண புவனபோகங்கள் நல்லனவாகவும் தீயனவாகவும் கிடைக்கும். நல்வினையும் தீவினையைப்போல் பிறவிக்கே காரணமாகும். இன்பமும் துன்பத்தைப்போல் பந்தத்தைத் தருமேயொழிய விடுதலையைத் தராது. ஆணவமலம் "நான், எனது" என்ற பற்றுக்களாக நின்று மேலும் மேலும் வினையைச் செய்யும்படி ஆன்மாக்களைத் தூண்டும்.

மறுபிறப்புண்மை :—இம்மலங்களெல்லாம் தாமாக வேலை செய்ய மாட்டா. கடவுளின் ஆணையே இவைகளைச் செலுத்தும். கடவுளே பழைய வினைக்குத் தக்க அளவாக ஒவ்வொரு உயிருக்கும் அவ்வப்போது தகுந்த தநுகரணாதிகளைத்தருகிறார். ஒவ்வொருபிறவியிலும் உயிர்கள் தேடிக்கொள்ளும் வினையும் பழைய மூட்டையில் சேரும். இவ்வாறே ஒவ்வொரு உயிருக்கும் பிறவிகள் கடலின் அலைகள்போல ஓயாது வந்துகொண்டே யிருக்கும். எனவே கர்மவுண்மை, மறுபிறப்புண்மை யென்பன சைவத்துக்கு உடன்பாடே (Doctrines of Karma and re-incarnation)

தண்டனையும் கருணைச் செயலே :—குழந்தையின் மீது எவ்வளவு ஆசை மிகுதியாயிருந்தாலும் தகப்பன் அக்குழந்தை ஒரு தீங்கு செய்தால் அதை அடித்துத் திருத்துவான். அவ்வாறு அடிப்பது அவனது ஆசை குறைவினாலல்ல. மேலும் மேலும் தீங்குசெய்யாமல் தடுத்துக் குழந்தையைத் திருத்த வேண்டுமென்ற நல்லெண்ணமே அவன் அடிப்பதற்குக் காரணம். அதைப் போலவே நமதுதீவினைக்கேற்ற துன்பங்களை நமக்குக் கடவுள் தருவதால் அவருடைய காருண்யத்துக்குக் குறைவு ஏற்படாது. காருண்யத்துக் கழகு தீவினைக்காக உயிர்களைத் தண்டித்துத் திருத்துதலேயாம். இவ்வாறே இறப்பும் கருணையின் காரியமே. இவ்வுலகத்தில் இறப்பே இல்லை பிறப்புமட்டும் உண்டு என்றால், நாம் நிற்கஇடமும் மூச்சுவிடக் காற்றும் இல்லாமல் போய் விடுமல்லவா ? ஒரு வாழ்க்கையினால் வரும் கஷ்டங்களை யொழித்து இளைப்பாறுதல் வேண்டாமா ? ஆகையால்தான் "அழிப்பு இளைப்பாற்றல்" என்று சைவ சமயம் கூறுகின்றது.

உயிர் பாசத்தை நீக்கும் வழிகள்:—இதுவரை பதிபசு பாசங்களின் உண்மையையும் இலக்ஷணங்களையும் கண்டோம். இனிப் பசு, பாசத்தை

நீக்கிப் பதியை யடைவதற்குரிய சாதனங்களையும் அவற்றால் வரும் பயனை யும் கவனிப்போம். மாயையின் சேஷ்டையால் உலக இன்பத்தைப் பெரிதாக எண்ணி ஆணவத்தின் சேஷ்டையால் "நான், எனது" என்ற பற்றுக்களை வளர்த்து, கர்மத்தின் சேஷ்டையால் ஆன்மா நல்வினை தீவினைகளைப் புரிவதால்தான் பாசம் ஆன்மவைக் கட்டியிருக்கிறதென்று மேலே கண்டோம். எனவே பாசக்கட்டு ஒழிய வேண்டுமானால் இம்மூன்று சேஷ்டைகளையும் ஒழிக்கவேண்டும். அதாவது உலக இன்பத்தைப் பெரிதாக எண்ணக் கூடாது, நான் எனது என்ற பற்றுக்களை வளர்க்கக் கூடாது, அவற்றின் காரணமாக நல்வினை தீவினைகளைச் செய்யக்கூடாது. இவைகளைச் செய்யக் கூடாது என்றால் வேறு என்னதான் செய்வது என்ற கேள்வி உண்டாகும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு அந்தக்கரணங்களும் ஒய்வெடுத்துக்கொண்டு சும்மா இருக்கமுடியாது. ஆகையால் இவைகளுக்கு வேறு வேலை கொடுக்கவேண்டும். அதுதான் கடவுளைப்பற்றிய வேலை. மனம் ஒரு குரங்குபோல எதாவது ஒரு கிளையைப் பிடித்துக் கொண்டேயிருக்கும். இதைப் பற்றுக்கோடு என்று சொல்லுவார்கள். உலகம் மனதுக்கு ஒரு பற்றுக்கோடு. இதை விட்டால் மனதுக்கு வேறு ஒரு பற்றுக் கோடு தேவை. அதுதான் கடவுள் என்ற பற்றுக்கோடு. இவ்வாறே மற்ற மூன்று அந்தக்கரணங்களின் தொழிலும் இருக்கும். ஆகையால் உலகத்துக்குப் பதிலாகக் கடவுளைவைத்து ஆன்மா தனது வேலைகளையெல்லாம் செய்வதுதான் பாசக்கட்டை ஒழிப்பதற்கு உபாயமாகின்றது. இந்த உபாயம் நான்கு படிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவை ஒவ்வொன்றிலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு உட்பிரிவுகள் உள்ளன. இந்த சாதனமுறைகளில் செல்வதற்குமுன் சமயப் பிரவேசம் என்ற ஒரு சடங்கு இருக்கிறது. அதற்கு தீக்ஷை அல்லது கண் திறத்தல் என்று பெயர். அதாவது ஞானக் கண் அல்லது சமயக் கண்ணைத் திறக்க வைத்தலாகும்.

சரியைத் தொண்டு :—சரியைத் தொண்டு என்பது கடவுளை எஜமானனாக ஒரு உருவத்தில்கொண்டு எஜமானனுக்கு ஒரு வேலைக்காரன் எந்தெந்த உபசாரங்களெல்லாம் செய்யக்கூடுமோ அவைகளையெல்லாம், அவ்வுருவத்துக்குச்செய்தல். அலகிடுதல், மெழுகுதல், பூக்கொய்தல், பூத்தொடுத்தல், இன்னும் இவைபோன்ற மற்ற காரியங்களெல்லாம் செய்தல். இவ்வாறு செய்வதால் உலகப் பொருள்களில் தான் வைத்துள்ள பற்று கொஞ்சம் கொஞ்சமாக விட்டுக்கொண்டேவரும். தனக்கென ஒன்றும் செய்யாமல் கடவுளுக்கென்றே செயல் நிகழ்வதால் ஆணவ மலமும் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்துவரும். இத்தொண்டை தாசமார்க்கம் என்றும் கூறுவது இயல்பாம்.

கிரியா மார்க்கம் :—கிரியைத் தொண்டாவது உருவத்திலே கடவுளை எழுந்தருளச் செய்து அபிஷேகம் போன்ற பதினாறு வகையான உபசாரங்களைச் செய்து, தீயை வளர்த்து அதையும் கடவுள் உருவாக எண்ணி உயிர் வதையில்லாத வேள்வியைச் செய்தல். இங்கே 'நான்' என்ற பற்றும்

'எனது' என்ற பற்றும் மிகுதியாக நீங்கும். இம்மாதிரியான வேலை கடவுளைத் தகப்பனாகப் பாவித்துப் பிள்ளை செய்யும் உபசாரத்துக்கு ஒப்பிடப்பட்டு, கிரியைத் தொண்டுக்கு சத்புத்ரமார்க்கம் என்ற பெயரும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

யோகமும் ஞானமும் :—யோகம் என்பது உடம்பின் கூறுகளை நன்றாய் அறிந்து பிராண வாயுவைத் தன் வசப்படுத்தித் தொழிற்படுத்தி உடம்பினுள்ளிருக்கும் ஒளிவடிவான கடவுளைக் கண்டு வழிபட்டு இன்பம் அடைதல். இதைக் கடவுளும் தானும் சிநேகிதர்கள்போல அளவளாவும் தன்மைக்கு ஒப்பிடுவர். இந்த வழிக்கு சஹமார்க்கம் என்று பெரியோர்கள் பெயரிட்டுள்ளார்கள். எல்லாவற்றிலும் சிறந்தது ஞானமார்க்கம். இதில் ஞான சாத்திரங்களையெல்லாம் கசடறக்கற்று அவைகளின் முடிபுகளைத் தனது வாழ்க்கையில் பதித்து ஒழுகுவது முதலிய செயல்கள் நடைபெறும். இவ்வழியைப் புருஷன் பெண்சாதி இருவரும் களங்கமின்றிப் பரிசுத்தமாக நடத்தும் வாழ்க்கைக்கு ஒப்பிட்டு இதற்கு சன்மார்க்கம் என்ற பெயரைப்பெரியோர்கள் கொடுத்துள்ளார்கள்.

ஆன்ம லாபங்கள்:—இந்த நான்கு சாதன முறைகளால் ஆன்மாவுக்குக் கிடைக்கின்ற லாபங்கள் மூன்று. அவை இருவினை யொப்பு, மலபரிபாகம் சத்திநிபாதம் என்பனவே. இருவினையொப்பு என்பது இன்பத்தையும் துன்பத்தையும் விருப்பு வெறுப்பின்றிக் காணுதல். மலபரிபாகம் என்பது ஆணவமலத்தினுடைய சத்தி குறைந்தொழிதல். சத்திநிபாதம் என்பது கடவுளுடைய திருவருளானது ஆன்மாவில் வந்து பதிதல். இவ்வாறு திருவருள் கைகூடினால் ஆன்மாவானது எடுத்த அப்பிறவியுள்ள வரை பிராரத்வ கர்மத்தை யனுபவித்துவிட்டுப் பிறகு சிவசாயுச்சிய பதவியென்ற பாமுத்தியைப் பெறும்.

எவ்வளவு ஞானம் முதிர்ந்தவனாயிருந்தாலும் கோயில் வழிபாடும் அன்பர் கூட்டுறவும் வேண்டும். இல்லாவிட்டால் ஆணவமலம் மீண்டும் தொடர்ந்து வலிபெருக்கும். ஜீவன் முக்தனுக்கும் ஆணவ மலம் "மாயாதே தன் சக்தி மாய்ந்து" நிற்கும் நிலைதான் கிடைக்கிறது.

அணைந்தோர் தன்மை :—இந்த முடிந்த முடிபாகிய நிலையிலிருப்பவர்கட்கு ஜாதி, குலம், கோத்திரம், நாடு, மொழி, உற்றூர், உறவினர், நண்பர், பகைவர், நன்மை, தீமை முதலிய உலகத்திலுள்ள தொடர்புகள், வேற்றுமைகள் எவையும் கிடையா. இவைகள் இல்லாதிருப்பதே சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடிபான நிலை.

சைவ நூல்கள் :—சைவ சித்தாந்தத்தின் உண்மைகளெல்லாம் தேவாரம், திருவாசகம், பெரிய புராணம் முதலிய பன்னிரு திருமுறைகளினும், சிவஞானபோதம், சித்தியார் முதலிய பதினன்கு சாத்திரங்களிலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இம்மட்டில் சைவசித்தாந்த சாஸ்திர ஆராய்ச்சியை நிறுத்திக்கொண்டு மிகச் சுருக்கமாக சைவ இளைஞர்கள் தெரிந்து கொள்ளவேண்டியவைகளையும் செய்யவேண்டியவைகளையும் எண்ணிட்டுத் தொகுத்துக் கூறலாம் என்று நினைக்கிறேன். அவை கீழ்வருவனவேயாம்.

இருபது முடிபுகள்:—(1) கடவுள் ஒருவர் உண்டென்று நம்பவேண்டும். (2) அவரே இவ்வுலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கிறார் என்று அறியவேண்டும். (3) உயிர்கள் இயல்பாகவே உலகத்திலே பற்றுடையனவாகவுள்ளன என்பதை அறியவேண்டும். (4) இந்தப்பற்று நான், எனது என்ற இருவகையாகவுள்ளதெனஅறியவேண்டும். (5) இவ்வுலகத்திலே உயிர்கள் செய்கின்ற காரியங்கள் எல்லாம் இப்பற்றுக்களின் காரணத்தாலே உண்டாகின்றன என்று அறியவேண்டும். (6) உலக வாழ்வில் உயிர்கள் இன்பம் அனுபவிப்பதுபோலக் காணப்படினும் மிகுதியும் துன்பத்தையே அனுபவிக்கின்றனவென்று நன்றாய் உணரவேண்டும். (7) ஆகையால் உலகத்திலுள்ளபற்றை யொழித்தால்தான் உயிருக்கு உண்மையான இன்பம் கிடைக்குமென்று அறியவேண்டும். (8) ஆகையால் உலகப் பொருள்கள் மீதுள்ள பற்றை விட்டு கடவுள்மீது அன்பு செலுத்தவேண்டும். (9) கடவுள் உயிர்களிடத்து அளவற்ற கருணை உடையவரென்றும், தன்னைச் சரணமாக அடைந்தவர்களுடைய துன்பத்தைப் போக்கி இன்பத்தைக் கொடுக்கின்றாரென்றும் உணர வேண்டும். (10 கடவுளை அடைவதற்குச் சிறந்த உபாயங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு வழிகள் என்பதை நன்குணரவேண்டும். (11) இவ்வழிகளிற் சென்றால் கிடைக்கும் இலாபங்கள் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்தி நிபாதம், சிவசாயுச்சியம் என்று மிக நன்றாக உணரவேண்டும். (12) எவ்வளவு ஞானம் முதிர்ந்தாலும் திருக்கோயில் வழிபாடு, அன்பர்கள் கூட்டுறவு என்பவற்றைக் கைவிடக் கூடாது என்று அறியவேண்டும். (13) எக்காலத்திலும் எல்லாவுயிர்கட்கும் இயன்றவரை நன்மையே செய்தலாலும் அவைகளின் துன்பத்தைப் போக்குதலாலும் அன்பர்கள் கூட்டுறவு கிடைக்கும் என்பதை நன்குணர வேண்டும். (14) பேரின்பத்திற்குச் சாதனமான அறிவு அல்லது ஞானம் அடைய வேண்டுமானால் சிவஞானபோதம் முதலிய பதினான்கு சித்தாந்த சாஸ்திரங்களையும் முக்கியமாக தேவாரம், திருவாசகம், பெரியபுராணம் முதலிய பன்னிரு திருமுறைகளையும் தினந்தோறும் இயன்ற அளவு ஐயம் திரிபு அறக் கற்கவேண்டும். (15) நாடோறும் இயன்றவளவு உயிர்கட்கு நன்மையைச் செய்யவேண்டும். (16) அருளுக்கு அடிப்படையான புலால் மறுத்தல் என்ற தர்மத்தைக் கைக்கொள்ள வேண்டும். (17) தினந்தோறும் செய்யும் எல்லாக் காரியங்களையும் "எனக்காக நான் செய்கின்றேன்" என்ற எண்ணத்தோடு செய்யாது, "கடவுள் திருவருள் இவ்வாறு என்னைக் கருவியாகக்கொண்டு இவைகளைச் செய்விக்கிறது" என்று உண்மையாகவே எண்ணிச் செய்யும்படி பழக்கம்செய்து கொள்ளவேண்டும். (18) "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற பழமொழியின்படி நமக்குக் கிடைக்கும் இன்பத்தைப் பிறருக்கும் பங்கிட்டுத் தரவேண்டும். (19) நாம் மட்டும் நன்னெறியில் ஒழுகுவதோடு நில்லாது பிறரையும் நன்னெறியில் ஒழுகும்படி செய்யவேண்டும். (20) "எவ்வுயிரும் நீங்காதுறையும் இறை சிவனென்று, எவ்வுயிர்க்கும் அன்பாயிரு" என்ற ஆன்றோர் வாக்கின்படி நமது வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியையும் நடத்த வேண்டும். ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

# அரசாங்கம் அங்கீகரித்தது

[காரியதரிசி]

நமது சமாஜத்திய தேவாரப் பதிப்புக்களை முனிசிபாலிடி, ஜில்லா, தாலுகா போர்டுகள், யூனியன் போர்டு முதலியவற்றிற்குட்பட்ட பாடசாலைகளிலுள்ள புத்தக நிலையங்கட்கு உபயோகிப்பதற்கு அரசாங்கத்து அங்கீகாரம் தேவையென்றும், அவ்வங்கீகாரம் கிடைத்துவிட்டால் தங்கள் தங்கள் தாலுக்கா போர்டு முதலியவைகட்கு நூறு ஐம்பது என்ற வகையில் புத்தகங்களை வாங்கக்கூடும் என்றும் சில நண்பர்களும் ஷை போர்டுகளின் அங்கத்தினரும் நமக்குத் தெரிவித்தார்கள். அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி நாமும் அரசாங்கத்துக்குமனு செய்ததில் நமது சமாஜப் பதிப்புக்களாகிய அப்பர் தேவாரம், சுந்தரர் தேவாரம், சம்பந்தர் தேவாரம் என்ற மூன்று புத்தகங்களும் அரசாங்கத்தினரால் புத்தகநிலைய உபயோகத்துக்கென அங்கீகரிக்கப்பெற்றுள்ளன. (Approved by the Text-book Committee as suitable for Libraries). இந்தச் செய்தி போர்ட் செயின்ட் ஜார்ஜ் கெஜட் 12-4-32-ல், பார்ட் I. B. Educational என்ற பகுதியில் 245-ம் பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது. இனியாவது ஷை போர்டுகள் உதவிபுரியவேண்டும்.

# திருமயிலை யமக அந்தாதி

## முன்னுரை

[தலங்கடோறும் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான் மீது பாவலரும் நாவலரும் அன்பு மேலீட்டாற் பாடும் பதிகங்கள் பல. பிரபந்தங்களும் பல திறப்படுவனவாம். அவற்றுள் அந்தாதிகளே மிக்குப் பயில்வன. அந்தாதியும் யமகம், திரிபு, மடக்கு முதலாய சித்திரங்களமைத்துப் பாடப்படும். திருச்செந்தில் நிரோட்டக யமக வந்தாதி, திருத்தில்லை யமக வந்தாதி, துறைசை யமக வந்தாதி யெனப்பலவாம். இவை புலவரது கவிபாடுந் திறனைப் புலப்படுத்துவதன்றி வேறு பெருமையுடைய தன்று. மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய யமகவந்தாதிகளைப் பதிப்பித்த மகாமகோபாத்யாய பிரமஸ்ரீ வே. சாமி நாதையரவர்கள் 'யமக வலங்கார நோக்கி அடிகளின் ஈற்றிலிருக்கும் உடன் மேல் உயிரேற்றாமலும், உயிர்முன் உயிர் வரும்போது உடம்படு மெய் வருவித்து அதன் மேல் உயிரேற்றாமலும் குற்றுகரத்தைக் கெடுத்து அது கெட நின்ற மெய்மேலுயி ரேற்றாமலும் நகரம் வரவேண்டிய விடத்து னகாமும் னகாம் வரவேண்டிய விடத்து நகாமும் பதிப்பிக்கப்பட்டன. வாசிப்பவர்கள் உடன் மேலுயிரேற்றியும் உடம்படு மெய் வருவித்து உயிரேற்றியும் குற்றுகரத்தைக் கெடுத்துக் கெட நின்ற மெய் மேலுயிரேற்றியும் நகர னகர பேதங்களை யறிந்தும்வாசித்துப் பொருள் கொள்க' என்று எழுதி யிருக்கின்றார்கள்.

அவ்வாறே திருமயிலை யமக வந்தாதியும்* படிக்கவேண்டிய தொன்றாகும். இந்நூல் 'ஊர் திரை வேலை யுலாவும் உயர் மயிலை'யின் கண் கோயில் கொண்டிருக்கும் கபாலீச்சுரத்தான் மேற் பாடப்பட்டது. காப்பு உள்பட இருபத்தைந்து செய்யுள் கொண்

---

* திருமயிலைத் திரிபு அந்தாதி யென்றொன்று உண்டு. அது மயிலாடு துறையான மாயூரத்தின்கண் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்மீது பாடப்பட்டது.

டது. நூலாசிரியர் இன்னாரென்று விளங்கவில்லை. இந்நூலுரை யாசிரியர் திருமயிலையில் வாழ்ந்த மகாவித்வான் சண்முகம் பிள்ளை யென்று ஊகிக்கவேண்டி யிருக்கிறது. இலக்கணக் குறிப்புக்களும் ஆங்காங்கே காணப்படுகின்றன. அவை இருதலைப் பகரத்துள் காட்டப்பட்டுள்ளன. இந்நூலுக்கு உரையின்றேல் இதன் பெருமை விளங்காது. இதனைச் சிவநேயர்கள் படித்தானந்திக்குமாறு 'சித்தாந்த'த்தின் மூலமாக வெளியிடப்படுகிறது.—சோமசுந்தர தேசிகர்.]

## காப்பு

கூத்தாடு வர்க்க வளந்தோன் பணியரன் கோகிலங்கள்
கூத்தாடு சோலை மயிலையந் தாதியைக் கூறவுரு
கூத்தாடு விப்புகழ் வார்க்கருள் கற்பகங் கொண்டல்வண்ணக்
கூத்தாடு மைங்கரன் காப்பாகு மேன்மை கொடுத்திடுமே.

(பதவுரை) கூ - பூமியை, தாள்அவர்க்க - பாதம் சிவக்க, அளந்தோன் பணி அரன் - அளந்த திருமால் வணங்கும் பரமசிவனது, கோகிலங்கள் கூ - குயில்கள் கூவுதலையுடைய, தாடுசோலை - பெரிய சோலைசூழ்ந்த, மயிலை அந்தாதியைக் கூற - திருமயிலை அந்தாதியைச் சொல்லுவதற்கு, உருகு - நெஞ்சம் அன்பால் நெகிழ்ந்து, தாள் - முயற்சியால், துன்னி - காலங்கடோறும் தனது ஆலயத்தின்கண் வந்து, புகழ்வார்க்கு - தன்னைத் துதி செய்யும் அன்பர்களுக்கு, அருள் கற்பகம் - வேண்டிய வெல்லாம் கொடுக்கும் கற்பகத் தருவாகிய கொண்டல் வண்ணம் - மேகம்போல நீலவர்ணத்தைப் பொருந்திய, கூத்தாடும் ஐங்கரன் - கூத்தாடுகின்ற ஐந்து கரங்களையுடைய கணேசப்பெருமான், காப்பாகும் - இடையூறு வாராமற் காப்பார்; மேன்மை கொடுத்திடும் - எழுத்து முதலிய ஐந்தியலும் வழுவாமற் பாடும் அறிவுடைமையையுங் கொடுப்பார்- [எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது. உருகு - உருகூ விகாரம்]

## நூல்

சீராக மாதவன் போற்றும் பதாம்புய சேயிதழிச்
சீராக மாத வளந்தரு தண்மதிச் செஞ்சடையாய்
சீராக மாதவர் நல்லோர்கள் வாழுந் திருமயிலைச்
சீராக மாதவ னேராக நல்குன் திருவருளே. ௧

(ப - ரை) சீராக - இந்திரன் முதலிய கடவுளர்க்கு மேலான செல்வங்க ளுண்டாம் வண்ணம், மாதவன் போற்றும் பதாம்புய - திருமால் துதிசெய்யும் பாத தாமரையினைப் பொருந்திய சிவனே; சே இதழி சீர் ஆக - சிவந்த கொன்றை மாலையினை யணிந்த அழகிய மார்பனே; மா தவளம் தரு தண் மதி செம் சடையாய் - பெருமையும் வெண்மையும் பொருந்திய குளிர்ந்த பிறையைத் தரித்த சிவந்த சடாமகுடத்தை உடைய பரனே; சீர் ஆகமா - புகழ் பொருந்திய காமிகாதி வாதுளாந்தமாகிய இருபத்தெட்டுத் திவ்யாகமங்களைத் திருவுளம் பற்றின கர்த்தனே; தவர் நல்லோர்கள் வாழும் திருமயிலை சீரா - சரியை, கிரியை யோக மென்னும் மூன்று பாத ஒழுக்கத்தோர்களும் ஞான ஒழுக்கத்தோரும் நிலைபெற்று வாழும் திருமயிலைப் பதியில் எழுந்தருளியிருக்கும் சிறந்த அரனே; கம் ஆதவன் நேராக - விசும்பின் கண் விளங்கும் சூரியனுக்கு ஒப்பாம் வண்ணம், உன் திருவருள் - நினது திருவருளை, நல்கு - அடியேனுக்கு நல்குவாயாக.

திருமயி லைக்கண் மலர்கொன்றைத் தாமர் சிகரமொப்போ
திருமயி லைக்கண் மணியணி வோர்காஞ் சேருமின்மு
திருமயி லைக்கண் ணன்மரு கோற்கருள் சிற்பரர்பூந்
திருமயி லைக்கண் மகிழ்சோதி யார்பதஞ் சிந்திப்பனே. ௨

(ப - ரை) திரு மயிலைக் கள் மலர் - சிறந்த இருவாட்சியினது தேன்பொருந்திய பூவையும், கொன்றை தாமர் - கொன்றை மாலையையும் அணிந்தவர் ; சிகாம் ஒப்பு ஒது மலைக்கொப்பாகச் சொல்லும், இரும் அயிலை கண்மணி அணிவோர் - பெரிய திருமாலாகிய மீனின் கண்மணியைத் தரித்தவர் ; கரம் சேரும் மின்முறிரும் அயிலை - கையிடத்துப் பொருந்தும் ஒளிமிகுந்த வேலாயுதத்தை, கண்ணன் மருகோற்கு அருள் சிற்பரர் - விட்டுணுவுக்கு நல்மருகனாகிய சுப்பிரமணியக் கடவுளுக்குக் கொடுத்த ஞான சொருபர் ; பூம் திருமயிலைக் கண் - தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமி சேர்ந்த திருமயிலைப்பதியிடத்து, மகிழ்சோதியார் பதம் சிந்திப்பன் - மகிழ்ச்சியுடனே எழுந்தருளியிருக்கும் சிவனார் பாதாரவிந்தத்தைத் தியானம் பண்ணுவேன். [அன் ஈறு தன்மைக்கண் வந்தது. ஏகாரம் ஈற்றசை.]

சிந்தாரப் பன்னக வேணிய மாநிலஞ் சேர்ந்தளந்த
சிந்தாரப் பன்னக வேணியெல் லாம்புகழ் தேவவுள்க
சிந்தாரப் பன்னக வேணிதம் போற்றா செந்நெல்கழை
சிந்தாரப் பன்னக வேணின் மயிலைச் சிவனருளே. ௩

(ப - ரை) சிந்து - கங்கையாற்றினையும், ஆர் - ஆத்திமாலையினையும், அ பன்னகம் - முனிவரேவிய பாம்பினையும் தரித்த, வேணிய - சடைமுடியை யுடையவனே, மாநிலம் சேர்ந்து அளந்த சிந்தார் - பெரியபூமியைப் பொருந்தியளந்த வாமனரும், அப்பன் - திருநாவுக்கரசரும், அகவேணி எல்லாம் புகழ்தேவ - கடல்சூழ்ந்த உலகங்களெல்லாமும் புகழும் தேவனே ; உள்கசிந்து ஆர பல் நகவேள் நிதம் போற்று அா - மிகவும் மனமுருகி பல மலைகளிலெழுந்தருளியிருக்கும் வேலாயுதக் கடவுள் தினந்தோறும் துதிக்கும் சிவனே ; செந்நெல் கழை சிந்து ஆரம் பன்னகவேணின் மயிலை சிவன் - செந்நெல்லும் கரும்பும் உதிர்க்கும் முத்தங்களைப் பொருந்தி சொல்லப்பட்ட பாவத்தின் கொடுமையில்லாத திருமயிலைப்பதியின் வாழுஞ்சிவனே, அருள் - கிருபைசெய்.

அருண வனன்கற் பகவல் லியநட னண்டர்பதம்
அருண வனன்கற் பகவல் லிலையயி லன்றுதொட்ட
அருண வனன்கற் பகவல்லி நாத னணிமயிலை
அருண வனன்கற் பகவல்லித் போதிடத் தண்ணுவனே. ச

(ப - ரை) அருணவனன் - மானைத்தரித்த கங்காதரன்; கற்புஅகம் அல்லியம்நடன் - முல்லை நிலத்தையும் அல்லியமென்னும் கூத்தையுமுடைய திருமாலுக்கும், அண்டர் - தேவர்க்கும், பதம் அருண அனன்-கால்சிவந்த அன்னவாகனனுக்கும், கல் பக-கிரவுஞ்சமென்னும் மலை பிளக்கும்படிக்கு, வல் இலை அயில் அன்று தொட்ட - வலிய இலை பொருந்திய வேலாயுதத்தை முன்பு ஒரு காலத்தில் விடுத்த, அருணம் வனன் - கோடி சூரியப் பிரகாசத்தைப் பொருந்திய சுப்பிரமணிய சுவாமிக்கும், கற்பகவல்லி - கற்பகவல்லி யென்னும் பெயரையுடைய உமாதேவிக்கும் நாதன் கர்த்தன் ; அணிமயிலை அருள் நவன் - அழகு பொருந்திய திருமயிலைப்பதியில் எழுந்தருளியிருந்து பாவிகளுக்கு அனுக்கிரகம் செய்யும் நவரூபத்தையுடையவன், நல் கற்பகவல்லிப் போது இடத்து அண்ணுவன் - நல்ல அன்பு பொருந்திய என்னுடைய இதயத்து மலர்ந்த அகவிதழையுடைய தாமரைப் பூவினிடத்துப் பொருந்துவன். [சிவபெருமான் நவந்தருபேதமா யிருப்பன் என்பது சிவஞான சித்தி.]

வனவேட னாணி யக்கங்கொண் டாள்பவன் மாதரென்னெல்
வனவேட னாணி யக்கனை நட்டவன் வாரெதிர்செல்

வனவேட ஞாணி யக்கா வாவென் மயிலை மன்ன
வனவேட ஞாணி யக்கட லோடுவ ரின்வெல்வனே. ரு

(ப - ரை) வனவேடஞர் - ஆரணியத்தில் வாழும் கண்ணப்பநாயஞர், அணிஅக்கம் கொண்டு ஆள்பவன் - சாத்தின கண்ணைத் தரித்துக்கொண்டு அவரை யாண்டவன்; மாதர் என் எவ்வனவேடன் - தாருகாவனத்துத் தவமாதர்கள் ஆசையால் நினைக்கும் இளமை வேடத்தை யுடையவன்; நார் அணி இயக்கனை நட்டவன் - அன்பு பொருந்திய குபேரனைத் தோழனுகவுடையவன்; வாரி எதிர்செல் - வைகையாற்றின் வெள்ளத்திற்கு எதிரே செல்லும், வனவு ஏடன் - திருப்பாசுரத்தி னெழுத்தைப் பொருந்திய திரு வேட்டையுடைய திருஞானசம்பந்தர், ஆர் ஆணி அக்கு அரவா என் - ஆத்திமாலையையும் அழகிய சங்கு மணியினையும் பாம்பினையுமுடையவனே யென்று தோத்திரஞ் செய்யும், மயிலைமன்னவன் - திருமயிலைப்பதியில் வாழுமிறைவன்; நவேள்-சிறந்த மன்மதன், தன் ஆரணியம் கடலோடுவரின் - தனது யிருந்த படைவகுப்பாகிய அக்கடலோடு என்னைப் பொருதற்கு வருவானுகில், வெல்வனே - அவனைச் சயிப்பேன். [துறை - கடவுட் பக்கம். மன்னவன் வெல்வான். வாரியென்பது வார் என நின்றது.]

வரியானை யானையன் மாயா புரிசத்தி மன்னன்மன்னு
வரியானை யானையன் மாயா புரியுடன் மாலகற்றை
வரியானை யானையன் மாயா புரியென் மயிலையினுண்
வரியானை யானையன் மாயா புரிமலர் வாயன்னமே. சு

(ப - ரை) வரியானையான் - அழகிய யானைமுகவனுக்கு, ஐயன் - பிதா; மாயாபுரி சத்தி மன்னன் - அன்பில்லாதாருக்கு மாயையைச் செய்யும் உமாதேவிக்கு நாயகன், மன்னு வரியான் ஐ - நிலைபெற்ற பாற்கடலிற்றுயிலும் திருமாலுக்குச் சுவாமி; ஆன் ஐயன் - இடபவாகனத்தையுடைய பெரியோன்; மாயாபுரியுடன் மால் அகற்று - பித்தனைப்போலத் தீர்க்கந்தத்தையுடைய உடலால் வரும் மயக்கத்தைத்தீர்க்கும், ஐவரியான் - அஞ்செழுத்தையுடையவன்; ஐயான் - அழகுள்ளவன்; ஐயன் - ஐயமேற்றவனது, மாயா புரியென் மயிலையின் - மாயாபுரியென்று சொல்லும் பெயரையுடைய திருமயிலைப்பதியில், நாண் வரியான் - வண்டால் ஆக்கிக்கொண்ட வில்லையுடைய மன்மதனே, நையான்- மடியான், ஐயான் மாயா - வியப்புடைய இராப்பொழுதோ விடியாது; புரிமலர்வாய் அன்னமே - அன்னம் பொருந்திய மலர்போலும் வாயையுடைய தோழீ! [மாயாவென்பது கடை குறைந்து நின்றது. துறை. தலைவன் பொருள்மேற் பிரிந்துழி தலைவி கலங்கல். யான் என் செய்வேனென்பது குறிப்பெச்சம்.]

வாயனக் தங்க டருமஞ் செயப்பொருள் வாழ்த்தவுனை
வாயனந் தங்க டருகிலன் வேதன் மனத்தின்மகிழ்
வாயனந் தங்க டருளிதழ்க் கஞ்ச மதியெனவெல்
வாயனந் தங்க டருந்தட வாவி மயிலையனே. எ

(ப - ரை) வாயன் - மெய்ம்மையனே! அந்தங்கள் தருமம் செயப்பொருள்-அழகுகளையுடைய நினது புண்ணியம் செய்தற்குப் பொருள்களையும், வாழ்த்த உனைவாய் அனந்தங்கள் - நின்னைத் தோத்திரம் செய்தற்கு எண்ணில்லாத வாய்களையும், தருகிலன் வேதன் - பிரமன் படைத்திலன், மனத்தில் - உள்ளத்து, மகிழ்வாய் அனம் தங்க - மகிழ்ச்சியாக அன்னங்களிருக்கும், அடர் - பொற்றகடுபோல, உள் - நினைத்தற்கேதுவாகிய, இதழ்க்கஞ்சம் - இதழையுடைய செந்தாமரைப் பூக்கள் சூரியனைப் போலவும், மதியென - சந்திரனைப்போல, எல்வாய் அல் - பகற் காலத்தும் இராக்காலத்தும், நந்து - சங்கங்களும், அடரும் - சேர்ந்திருக்கும், அங்கு - அவ்விடமாகிய ஆகாயம்போலும், தடம்

வாவி மயிலையன் - இடமகன்ற வாவி சூழ்ந்த திருமயிலைப்பதியில் வாழுஞ்சிவனே! [தியானம் பண்ணுதற்கு ஒருமையில்லாத மனமுடையேனென்பது குறிப்பெச்சம். சூரியனைப் போலவென்பது அவாய் நிலையான் வந்தது. அன்னம் தங்குமென்பது அனம் தங்குமென்று குறைந்து நின்றது. வேதன் தருகிலன்.]

அனேகாவென் பார்க டமக்குப் பலவுரு வாந்தகுதி
அனேகாவென் பார்கடத் தோர்பாவை செய்த வவர்க்கருளை
அனேகாவென் பார்கடந் தாரறி யாய்பொழி லாமயிலை
அனேகாவென் பார்கட னஞ்சார் கிரீபத்தை யாசைநெஞ்சே. அ

(ப - ரை) அனேகா என்பார்கள் தமக்கு - பல உருவத்தை யுடையவனேயென்று நினைத்தவர்க்கு, பல உரு ஆம் தகுதியன் - பல வடிவாய்வரும் முறைமையுடையவனே; ஏகா - என்றும் ஒரு தன்மையுடையவனே; என்பு ஆர் கடத்து - எலும்பு நிறைந்த குடத்தினின்றும், ஓர் பாவை செய்த அவர்க்கு - அவ்வெலும்புகளை யொப்பற்ற பூம் பாவையாகச் செய்த சம்பந்தமூர்த்திக்கும், அருள் ஐயன் - திருவருளைக் கொடுக்கும் கர்த்தனே; ஏகா வென் பார் - நீங்காத வெற்றியையுடைய பூமியை, கடந்தார் - இீண்டு தேடிய மாயனால், அறியாய் - அறியப்படாதவனே; பொழிலாம் மயிலையனே - எக்காலமுஞ் சோலையுண்டாகாநின்ற திருமயிலைப்பதியில் வளர்பவனே; கா என் - இரட்சியென்று சொல்; கடல் நஞ்சு ஆர் கிரீபத்தை பார் - கடலிலுண்டாகிய விடம் பொருந்திய அவனது கந்தரத்தைப் பார்ப்பாயாக, ஆசை நெஞ்சே - வீணாசை கொண்ட நெஞ்சமே. [நீ என்னுந் தோன்றா எழுவாய்க்கு என், பார் என்பன இரண்டும் பயனிலை. வென் - வென்றி.]

ஆம்பலஞ் சங்கத் தாளத் தலரு மணிமயிலை
ஆம்பலஞ் சங்கத் தரியுரி யாயரு ளாத்திமுல்லை
ஆம்பலஞ் சங்கத் தலைமதி தென்ற லலரிசைக்கு
ஆம்பலஞ் சங்கத் தடன்மார வேள்கணைக் காற்றிலளே. சு

(ப - ரை) ஆம்பல் - குமுதங்கள், அம் சங்கம் தாளத்து அலரும் - அழகிய சங்கங்களீன்ற முத்தங்களின் ஒளியால் மலர்கின்ற, அணி மயிலை - அழகிய திருமயிலைப் பதியிடத்து வாழும், ஆம்பல் அஞ்சு அங்கத்து - யானைகள் அஞ்சுதற்கு ஏதுவாகிய உருவத்தையுடைய, அரியுரியாய்-நரசிங்கத்தின் தோலைப் போர்த்துக் கொண்டவனே; அருள் ஆத்தி - உனது ஆத்தி மாலையைக் கொடுப்பாயாக; முல்லை அம்பல் அஞ்சம் (ஹம்சம்) - முல்லை யரும்பாகும் தந்தங்களைப் பொருந்திய அன்னநடையையுடையாள், கத்து அலை-ஒலிக்கும் கடலும், மதி - சந்திரனும், தென்றல் - தென்றற் காற்றும், அலர் - பலர் அறியச் சொல்லும் பழிமொழியும், இசைக்கும் ஆம்பல் - ஊதும் வேய்ங்குழலுமாகிய, அஞ்சு அங்கத்து - ஐவகை யுறுப்பிற்கும், அடல் மாரவேள் கணைக்கு - கொலை செய்யும் மன்மத பாணத்திற்கும், ஆற்றிலளே - எதிர் நின்று ஆற்றமாட்டாள். [துறை - கடவுட்பக்கம்.]

இலங்கங் குழையத் தவஞ்செய் மயிலைக் கிறைவர்மன்னு
இலங்கங் குழையத் தரவிந்த ளர்சிர மேந்தார்சங்க்
இலங்கங் குழையத் தரவெற்பின் மின்னுட் கிமயமெச்ச
இலங்கங் குழைபத் தனங்கருங் கண்க ளிடைவஞ்சியே. கo

(ப - ரை) இல் - மனையாளாகிய உமாதேவி, அங்கம் குழைய தவம்செய் மயிலைக்கு இறைவர் - திருமேனி வருந்தத் தவஞ் செய்ததலமாகிய திருமயிலைப் பதிக்குக் கர்த்தர்; மன்னு இலம்-நிலைபெற்ற வீடாகிய, கம் - சலமும், குழை-இலைகளும், அத்து -

பொருந்தும், அரவிந்தனர் சிரம் என்று அரர் - தாமரைப் பூவிலிருக்கும் பிரமதேவர் சிரத்தைக் காத்தில் தரிக்கும் அரனர்; இலங்கு அம் சங்கக் குழை அத்தர் - விளங்கும் அழகிய சங்கக் குழையையுடைய சிவனருடைய, அவெற்பின் மின்னட்கு - அந்த மலையிடத்திற்கண்ட மின்போன்ற மங்கைக்கு, இமயம் மெய்ச்சயிலம் - இமயமென்னும் மெய்யாகிய மலையும், கங்கு உழை - தினைப்புனத்திற் சஞ்சரிக்கும் மானும், அம் தனம் கரும் கண் - அழகிய கொங்கைகளும் கரிய கண்களுமாம்; இடை வஞ்சியே - இடை வஞ்சிக் கொடியாம். [துறை - இவ்விடத்து இவ்வியற்று என்றல்.]

வஞ்சிக்கு முப்புர மால்கணை மேருவில் வாய்ப்பவெய்தி
வஞ்சிக்கு முப்புர மாண்வென் மயிலை வரதமலை
வஞ்சிக்கு முப்புர மால்சேரப் பாலருண் மன்னகைத
வஞ்சிக்கு முப்புர மால்செலப் பாதம் வழங்குவையே. ௧௧

(ப - ரை) வஞ்சிக்கு - போரிடுதலைக் குறித்துச் சொல்லுதற்கு, உம் - உம்முடைய, உப்பு உரம் மால் கணை - கடலிடத்துப் பள்ளிகொள்ளும் திருமால் பாணமாயும், மேரு வில் - மகமேருமலை வில்லாயும், வாய்ப்ப எய்தி - வாய்க்கும்படி பொருந்தி, வஞ்சிக்கும் முப்புரம் மாண்வென் - தேவர்களை வஞ்சித்தலைச் செய்யும் முப்புரத்தார் பெருமையை வென்ற, மயிலைவாத - திருமயிலைப் பதியில்வாழும் வள்ளலே! மயிலைவஞ்சிக்கும் - திருமாலுக்கு ஒரு பாகம்கொடுத்ததேயன்றி மலைமகளுக்கும், உப்பு - இனிமையையும், உரம்- ஞானவலிமையையும், மால் - விருப்பத்தையும், சேர - பொருந்த, பால் அருள் மன்ன- இடப்பாகத்தைக் கொடுத்த கர்த்தனே; கைதவம் - வஞ்சனையும், சிக்கும் - பிணக்கும் பொருந்திய, உப்புரம் - அந்தத் தேகங்களாலுண்டாகிய, மால் செல - மயக்கவினை யென்னைவிட்டுப்போக, வழங்குவையே - உன் திருவடியை யருளுவாய். [உப்புரம் - இவ்வுடலுக்குமுன் எடுத்த உடலங்கள். மால் - ஆகுபெயர், குன்றி நெஞ்சுபக வெறிந்த அஞ்சுடர் நெடுவேல் என்றாற்போல. உரமென்பது ஈண்டு இடப்பொருட்டாய் நின்றது. நீ வழங்குவை.]

குவையுரு முத்தலை நீக்கு மயிலைக் குழகரிலங்
குவையுரு முத்தலைச் சூலர்பொற் றாண்மனங் கோயில்செய்தாங்
குவையுரு முத்தலை யுற்பவந் தீர்ந்து குறைவின்றியோங்
குவையுரு முத்தலை யெய்து மரவெனக் கூற்றஞ்சுமே. ௧௨

(ப - ரை) குவையுருமுத்து - குவியலாக விருக்கும் வெண்ணிற முத்தங்கள், அலை நீக்கு மயிலைக் குழகர் - இருளினைத்தாக்கும் திருமயிலைப் பதியில் வாழும் நித்தியமாயிருக்கும் இளமையுடையவர்; இலங்கு வை முத்தலை சூலர் - பிரகாசிக்கும் கூர்மையுடைய வடிவினையும் மூன்று தலையினையும் பொருந்திய சூலாயுதத்தாது, பொற்றாள் - பொலிவு பொருந்திய பாதத்தை, மனம் கோயில் செய்தாங்கு வை - நெஞ்சமே, உன்னைக் கோயிலாகச் செய்து அக்கோயிலுள்ளே வைப்பாயாக; உரு முது அலை உற்பவம் தீர்ந்து - அச்சத்தைச் செய்யும் பழைய கடல்போலும் பிறவியெல்லாம் தீர்ந்து, குறைவின்றி ஓங்குவை - ஞானத்திற் சிறிதுங் குறையாமல் யாவர்க்கும் மேலாயிருப்பாய்; உருமுத்தலை செல்லும் அரவு என கூற்று அஞ்சுமே - இடியினிடத்திற் செல்லும் பாம்பு அஞ்சுவதுபோல இயமன் நம்மிடத்திற்கு வருதற்கு அஞ்சுவன். [பழைய கடல் - சகரர் தோண்டுவதற்கு முன்னுள்ள கடல். முந்து முத்தென வலித்து நின்றது. உருமுத்தலை யெய்துமரவு என்றது அபூத உவமை.]

அஞ்சன காட்டத் தாம்பையர் போல வணிநடைகொள்
அஞ்சன காட்டத்தன் போற்று மயிலைய னன்புசெய்யும்

அஞ்சன நாட்டத்த னம்புயத் தாடுணை யாகிநெஞ்சே
அஞ்சன நாட்டத் தரந்தையைத் தீர்த்துவந் தாட்கொளுமே. கங

(ப - ரை) அஞ்சனம் நாட்டத்து அரம்பையர் போல - கரிய கண்களையுடைய தெய்வப் பெண்களைப்போல, அணி நடை கொள் அஞ்சன் - அழகிய நடையையுடைய அன்னத்தை வாகனமாகவுடைய பிரமனும், அ நாட்டத்தன் - பல கண்களையுடைய மருத நிலத்துக் கிறையாகிய இந்திரனும், போற்று மயிலையன் - தோத்திரம் செய்யும் திருமயிலைப் பதியில் வாழுஞ் சிவன்; அன்பு செய்யும் அம்சனம் நாட்டத்தன் - தன்னிடத்து அன்பு வைக்கும் அழகிய மனிதரை உயர்ந்த பதவிகளிலே வைக்குந் திருநோக்கத்தையுடையவனது, அம்புயம் தாள் துணையாகி-தாமரை மலர்போன்ற பாதம் நமக்குத் துணையாயிருந்துகொண்டு, நம் நாட்டத்து அரந்தையைத் தீர்த்து வந்து ஆட்கொள்ளும் - நம்முடைய வாழ்நாளுக்கு வரும் அவமிருத்துத் துன்பத்தை நீக்கி மகிழ்ந்து நம்மையடிமைகொள்ளுமாதலால், நெஞ்சே அஞ்சல் - மனமே! நீ அஞ்சவேண்டாம். [நம் நாடு என்பது விகாரம். காலசக்கரம் நேரே நடவாமல் இராசிகளை இடையிலே தடுத்து அவமிருத்தை யுண்டாக்கும்.]

ஆட்டான மானங்கை யம்புலி தங்கொள் ளரனடத்தும்
ஆட்டான மானங்கை யம்புலி வேணிய னைம்முகன்பேட்
ஆட்டான மானங்கை யம்புலி நோன்மயி லைப்பதியா
ஆட்டான மானங்கை யம்புலி சேட னமரர்களே. கச

(ப - ரை) ஆட்டான், வெற்றியையுடையான்; அம்மான் - உயிர்கட்கெல்லாம் பிதாவானவன்; அங்கை - சங்குமணியினையும், அம் - கங்கையினையும், புல் - அறுகினையும், இதம் கொள் அரன் - நன்மையுடனே தரித்துக்கொள்ளுஞ் சிவன், நடத்து மாட்டான் - செலுத்துகின்ற ஆட்டுக்கடா வாகனத்தை யுடைய அக்கினியையும், நமான் - சிறந்த மானையும், அங்கை - அங்கையிடத் தேந்திய அம்புலி வேணியன் - பிறையைச் சடைமுடியிற்றரித்தபான், ஐமுகன் - ஐந்து திருமுகத்தை யுடையவன், பேடு ஆட்டான் அம்மான் - பேடு ஆடலென்னுங் கூத்தையுடைய காமனுக்கு அம்மானென்னும் முறையையுடையோன், அங்கை ஐயம் புல்லினோன் - தாருகாவனத்து ஐயமேற்றவன், மயிலைப்பதிஆன் - திருமயிலைப்பதியில் வாழுஞ் சிவபெருமானுடைய அடியார் யாவரென்னில், தானம் மால்-மாவலியிடத்திற்றானம் வாங்கிய திருமாலும், நங்கை - அவனுடைய செந்திருவும், அம்புலி - அழகிய வியாக்கிரபாதரும், சேடன் - பதஞ்சலியும், அமரர்கள் ஏ - தேவர்களுமாம். [அக்கு அங்கு மெலித்தல் விகாரம். தானம்மால் - ஒற்றில் வழி ஒற்றாய் வந்தது.]

அமரச் சலந்தாற் காய்ந்தோய் மயிலையர சடையுள்
அமரச் சலந்தரம் வைக்கும் பரம வகத்துவன்னி
அமரச் சலந்தர ளத்தி னகைமுக மாக்குவஞ்சம்
அமரச் சலந்தாந் தந்தரு ணல்ல வறிவென்றுமே. கரு

(ப - ரை) அமர் அ சலந்தார் காய்ந்தோய் - போர்த்தொழிலையுடைய அந்த சலந்தராசுரனைக் கோபித்தவனே; மயிலையரா - மயிலையில் வாழுஞ் சிவனே; சடையுள் அமர - சடையிற் பொருந்த, சலம் தாம் வைக்கும் பரம - கங்கையினையும் வெண்டலையினையும் அணிந்த பரமனே; அகத்து வன்னிச்சலம் அமர - நெஞ்சகத்து அக்கினிபோல கோபமிருக்க, தாளம் அத்திஇன் நகைமுகம்-முத்தங்களைப்போல முறுவலித்தலை முகத்தின் கண்ணும் உண்டாக்கும், வஞ்சம் அமர் அச்சு - வஞ்சனையை விரும்புதற் கேதுவாகிய உடலை, அலம் தாம்தந்து - எடுத்தலல்லாத மேன்மை வகையும் கொடுத்து, நல்லறிவு

என்றுமே அருள் - சிவஞானத்தை என்றுமே தந்தருளுவாய். [என்று மருள் என்றது சமவாத கண்டனம்.]

என்றருந் தந்த நினைவுல கத்தவர்க் கேழைநெஞ்சே
என்றருந் தந்த மிலக்கியங் கற்றறி வெய்துவைநீ
என்றருந் தந்த னெனச்செய் மயிலை யிறைவரந்த
என்றருந் தந்தமில் போகமெல் லாம்பின் பிடரில்லையே. ௧௬

(ப - ரை) என்தரும் உலதத்தவர்க்கு தம்தம் நினைவு - உலகத்துள்ள உயிர்கட்கு தங்கள் தங்கள் நினைவுகள் என்ன பயனைக் கொடுக்கும் ? ஏழை நெஞ்சே - அறிவில்லாத நெஞ்சமே, என்றும் அரும் தந்து அம் இலக்கியம் - எக்காலத்தும் அரியவாகிய நூல் போன்ற அழகிய இலக்கியங்களை, கற்று அறிவு எய்துவை நீ - எனக்குத் துணையாகிய நீ ஒதி ஞானத்தைப் பொருந்துவாய்; என்றும் அரும் தந்தன் என செய் மயிலை இறைவர் - எக்காலத்தும் பல்லில்லாதவனென்று சூரியனைச் செய்த திருமயிலைப் பதியில் வாழும் சிவனர், அந்தம் இல்போகம் எல்லாம் - முடிவில்லாத போகங்களை யெல்லாம், தந்த என்று அருந்து - நமது வினைக்கு ஈடாக்கியமைதாக் கொடுத்தனவென்று கருதிப் புசிப்பாயாக, பின்பு இடர் இல்லையே - இந்நிலையில் நின்ற பின்னாய் உனக்குப் பின்பு ஒரு துன்பமும் இல்லை. [தூய்மையும் நன்மையு முடைய நூல் போன்ற நீ அருந்து என்பது இசை யெச்சம்.]

இடப்பாலை யானனத் தான்பணி சங்கரன் யாழினிசை
இடப்பாலை யானனத் தான்ஞான மூர்த்தி யிமயமின்சேர்
இடப்பாலை யானனத் தான்மயி லைப்பதி யேத்திலர்போல்
இடப்பாலை யானனத் தான்மகள் சோற் கெழுதினனே. ௧௭

(ப - ரை) இடம்பால் - விசாலம் பொருந்திய பாற்கடலினையும், ஐ ஆல் - அழகிய ஆலையுமுடைய, ந நத்தான் பணி சங்கான், நல்ல சங்கபாணி வணங்கும் சிவபெருமான்; யாழின் இசைத்திடப் பாலை - வீணையாலே சொல்லப்படும் அந்தப் பாலைப் பண்ணைப் பாடும், ஆனன் - இடபவாகனத்தன்; அத்தம் ஆன் - அந்தி நிறம் போன்ற சிவந்தமேனியையுடையான், ஞான மூர்த்தி - ஞான சொரூபன், இமையமின் சேர் இடப்பாலை யானனத்தான்-மலைமகள் பொருந்தியவாமபாகத்தை யுடைய சிவபெருமானது, மயிலைப் பதி யேத்திலர் போல் - திருமயிலைப் பதியைத் தோத்திரஞ் செய்யாதார்போல, இடப் பாலையான்-பாலை நிலத்திடத்து, அனத்தான்-பிரமதேவன், மகள் சோற்கு எழுதினன்-என் மகள் செல்லுதற்குத் தலையில் எழுதினான். [நத்தான், விகாரம், இடப்பாலை, முன் மொழி பின்மொழி யாயிற்று.]

இனற்கிளைப் பாற்று வணத்திரி சூல செழுபரித்தேர்
இனற்கிளைப் பாற்று வணக்கா மயிலை யிறைவரன்பா
இனற்கிளைப் பாற்று வணத்தார்நல் காவிடி னின்றிரவின்
இனற்கிளைப் பாற்று வணாலை மூழ்குவ ளேந்திழையே. ௧௮

(ப - ரை) இனல்கிளை - இனிய இருட் கூட்டத்தை, பாற்று - போக்கும், வணம் திரிசூலர் - ஒளிபொருந்திய முத்தலைச் சூலத்தர்; எழுபரித்தேர் இனற்கு - ஏழுபச் சைக்குதிரை கட்டிய பொற்றேரையுடைய சூரியனுக்கு, இளைப்பு ஆற்று வணக்காம் மயிலை யிறைவர் - அனுதினமும் செல்லும் இளைப்பினைத் தாக்கும் அழகிய சோலைகள் சூழ்ந்த திருமயிலைப் பதியில்வாழுங் கர்த்தனே-இ நல் கிளைப்பால் அன்பாய் - இந்த நல்ல தாகச் சென்ற கிளியிடத்துக் கிருபை செய்து, அவணம் தார் நல்காவிடின் - எண்டோ

ளிற் கிடந்தசையும் சிறந்த கொன்றை மாலையைக் கொடாது விட்டால், இன்று இரவின் - இன்றை இராக்காலத்தில், இனல்கிளைப்பு ஆற்று - அன்பப் பெருக்காகிய ஆற்றின்கண் வணர் அலை மூழ்குவள் எந்திழை - சோகமாகிய வளைந்த அலையின் கண்ணே யழுந்துவாள் ஏந்திய ஆபரணங்களையுடைய தலைவி. [துறை - தலைவி தூதுவிடுதல் கண்ட தோழி சொல்லியது. ஏகதேச வுருவகம்.]

எந்தலை யந்தாத் தாரக மேவு மிறைமயிலை
எந்தலை யந்தாத் தாரகங் கைத்தலத் தேற்றவண்ணல்
எந்தலை யந்தாத் தாரக லாதணி யீசனளி
எந்தலை யந்தாத் தாரக மெய்ப்பொரு ளீகுவனே. கக

(ப - ரை) எந்தல் ஐ - கயிலை மலையி லெழுந்தருளி யிருக்கும் சுவாமி ; அந்தாம் தாரகம் மேவும் இறை - ஆகாயத்திலே தேவர்கள் மனம் விரும்புங் கர்த்தன் ; மயிலை எந்தல் - திருமயிலைப்பதியில் வாழுஞ் சிறந்தோன்; ஐயம் தா - தாருகாவனத்துத் தவமாதர் பிச்சையிட, தார் அகங்கைத் தலத்து ஏற்ற அண்ணல் - மலர்போலும் திருக்காத்தினிடத்து ஏற்றுக் கொண்ட சிவன்; எந்து அலை அம் - ஏந்திய அலையை யுடைய கங்கையினையும், தாத்தார் தலை மாலையினையும், அகலாது அணி ஈசன் - எக்காலமும் நீங்காமல் தரிக்கும் பரமேசுரன், அளியேம்தலை - எளியேமாகிய எங்களிடத்து, அம் தாம் தாரகம் மெய் பொருள் ஈகுவன் - அழகும் மேம்பாடும் பொருந்திய தாரகமந்திரத்தை யனுக்கிரகிப்பான்.

ஈயா தவன யனத்துணை யெய்துத லில்லைபொருள்
ஈயா தவன யனத்துறு நற்கதியெய் தல்வில்லி
ஈயா தவன யனத்து விதம்பெற வெண்ணுபுரார்
ஈயா தவன யனத்து மயிலை யிறையவனே. உ௦

(ப - ரை) ஈ ஆதவன் நயனத்துணை எய்துதல் இல்லை - பார்க்கும் ஈயானது சூரியன் கண்ணளவும் செல்லுதலில்லை - (அதுபோல) பொருள் ஈயாதவன் - தேடிய பொருளை நல்லோர்க்குக் கொடாதவன், அயனத்து உறு நல்கதி எய்தல் - சன்மார்க்கத்திலே பொருந்து நல்ல பதவியைப் பொருந்துதல், வில்லி - மலையை வில்லாகவுடையவனே, இயாதவன் அயன் அத்துவிதம் பெற ஒண்ணு புராரீ - யது வங்கிசத்தானாகிய திருமாலும் பிரமனும் ஞானனந்த அத்துவித மோட்சத்தைப் பெறுதற்குத் தியானம் பண்ணப்பட்ட சிவனே, அவனயல் நத்து - அவன் கோயிலின்கணுள்ள கடலில் சங்கங்கள் உலாவும், மயிலை யிறையவனே - திருமயிலைப் பதியில் வாழுஞ் சிவனே, யாது - எய்தற்குரியது எது ? [அடியேற்கு லோபமில்லாத விதரணத்தையும் அதற்கேற்ற பொருள்களையும் தந்தருள்வாய் என்பது குறிப்பெச்சம். எய்துதல் யாது என்பது கருத்து.]

இறையாய வெள்ளங்கத் தார்கலிப் பார்புரந் தேதுபெற்றத்
இறையாய வெள்ளங்கத் தார்சுகம் வேட்குநெஞ் சேயுய்குவாய்
இறையாய வெள்ளங்கத் தாரெண் புயத்த னெழின்மயிலை
இறையாய வெள்ளங்கத் தார்நெய்யின் மேவுவ னெங்குமன்றே. உக

(ப - ரை) இறையாய வெள்ளம் - அரசாகிய வெள்ள மென்னும் எண்ணுடையோர், கத்து ஆர்கலி புரந்து ஏது பெற்றது - ஒலிக்குங் கடல் சூழ்ந்த பூமியை இரட்சித்தலாற் பெற்ற பயன் யாது? இறை - பூமியிற்றங்கும், ஆய வெள் அங்கத்து - மகளிருடைய மலபாண்ட மேல் திகழும் முலை முதலிய அங்கங்களால், ஆர்சுகம் வேட்கும் நெஞ்சே - நிறைந்த சுகத்தை விரும்பும் நெஞ்சமே, இறையாய உய்குவாய் - ஒரு இறைப்

பொழுதாகிலும் தியானம் பண்ணினால் பிறவிக் கடலை நீந்திக் கரை யேறுவாய், (தியானிப்ப தெவ்வாறெனில்) வெள் அங்கம் தார் என் புயத்தன் - வெள்ளிய எலும்பு மாலையை யணிந்த எட்டுத் திருப்புயத்தையுடையவன், எழில் மயிலை இறை - அழகிய திருமயிலைப் பதியில் வாழும் கர்த்தன், ஆய வெள்ளங்கு - அந்தச் சிறிதாய வெள்ளத் தினிடத்தில், அத்தஜூர் நெய்யின் - பொருந்தி நிறைந்த நெய்போல, மேவுவன் எங்கும் அன்றே - எங்கும் வியாபித்திருப்பன் என்று கருதி நீ உய்குவாய்.

என்னாக ராவணற் பொற்சடை யாய்கட லேய்ந்தவிடம்
என்னாக ராவணற் காய்ந்தவன் போற்று மிறைவகுழை
என்னாக ராவணற் காமயி லைப்பதி யீசவிவட்க்
என்னாக ராவணற் கஞ்சாநல் காத திதழியையே. உஉ

(ப - ரை) என்நாகு அராஅணல் பொன்சடையாய் - நஞ்சுடையதென்று இகழப் படும் இளம்பாம்புகளைப் பொருந்தலையுடைய பொன்போன்ற சடையையுடையவனே; கடல் ஏய்ந்தவிடம் மென்ஆக - கடலிற் பொருந்திய ஆலகாலமென்று சொல்லத்தக்க கரிய உடைமையைப்பெற்ற, ராவணன் காய்ந்தவன்போற்றும் இறைவ - இராவணனைச் சங்கரித்த இராமர் போற்றும் சிவனே ; குழை என் ஆகரா - திருச்செவியிற் சாற்றுங் குழையாகிய ஒள்ளிய சங்கத்தையுடைய அரனே; வணல் கா - வளவிய நல்ல சோலைகள் சூழ்ந்த, மயிலைப்பதி ஈச - திருமயிலைப்பதியில் வாழுஞ் சிவனே ; இவட்கு - இத்தலை விக்கு, என்னாக - ஏதாக, ராவணற்கு அஞ்ச - இராக்காலத்திற்கு அண்ணலாகிய சந்திர னுக்குப் பயப்பட்ட, நல்காதது இதழியையே - கொன்றை மாலையைக் கொடாதது என் நீ சொல். [எல் - இகழ்ச்சி, இராவென்பது ராவென நின்றது.]

தேவா ரணங்கொடி யாக்கொண்ட தேவர்க் கிறையவிபர்
தேவா ரணங்கொடியரா விட்டபோ தட்டவெந் தைநற்புன்
தேவா ரணங்கொடி மாசலை சேர்மயி லீசன்றவள்
தேவா ரணங்கொடிப் பூமானை யன்பருக் கீபவனே. உங

(ப - ரை) தேம் ஆரணம் கொடியாக கொண்ட தேவர்க்கு இறை - உயிர்கட்கு நன் மையைச்சொல்லும் வேதத்தைக் கொடியாகக்கொண்ட பிரமனுக்குக் கர்த்தன்; அ விப ரீத வாரணம் கொடியரா விட்டபோது அட்ட எந்தை - அந்த அதிசயத்தைச் செய்யும் யானையைக் கொடிய தவத்தினையுடைய முனிவர் செலுத்தின காலத்தில் அதனை யுரித் தப்போர்த்த வெந்தை, நல்புனித வார்அணம்கொடு - நல்ல பரிசுத்தம் பொருந்திய கங்கா தேவியுடனே, இமாசலைசேர் மயிலீசன் - பர்வதராஜன்மகளாகிய உமாதேவியும்பொருந் தும் திருமயிலையில் வாழும் சிவன் ; தவளித வாரணம் கொடிப்பூ மா அன்பருக்கு ஈபவன் - வெண்மையான பாஞ்சசன்யமான சங்கத்தை யுடையவனும் கொடிப்பூவாகிய தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமிக்குக் கணவனுமான திருமாலாகிய அன்பருக்கு அருளுவான். [அவன் ஈபவன்.]

பவனம் பிருதிவி வான்றீகம் மாகும் பவனைவிரும்
பவனம் பிருதி விடாமற் செயச்செய் பானையுன் னும்
பவனம் பிருதிவி யஞ்சேர் மயிலைப் பதிதினஞ்செய்
பவனம் பிருதி விதப்போல் விளங்குவை பாரினெஞ்சே. உச

(ப - ரை) பவனம் பிருதிவி வான்தீகம் ஆகும்பவனை - வாயுவும் பிருதிவியும் ஆகா யமும் அக்கினியும் அப்புவுமாகிய பஞ்ச பூதத்தை யுண்டாக்குஞ்சிவனை, விரும்ப - இச்

சிக்க, வன் அம்பு - வன்மையுடைய அம்பாகிய திருமால், இருதிவிடாமற் செயச் செய்பரனை - நீங்காமற்செய்ய அனுக்கிரகம்பண்ணுஞ் சங்கரனை, உன்னும் பவநம்பு - தியானம்பண்ணும் பிறப்பையே விரும்புக; திவியம்சேர் மயிலைப்பதி இரு - அதிசயம்பொருந்திய மயிலைப்பதியிடத்து எக்காலமும் இருப்பாயாக; தினம் செய்பவன் - நாளையுண்டாக்கும் சூரியனைப்போலவும், அம்பு ருதுஇதுப்போல் - செல்விருதுவாகிய கார்காலத்துவருஞ் சந்திரனைப்போலவும், விளங்குவை பாரின் நெஞ்சே - பூமியினிற் பிரகாசிப்பை நெஞ்சமே. [அப்பு - அம்பு, இந்து - இது விகாரம். நீ விளங்குவை.]

கபாலீச னடிகளே சரணம்

[முற்றும்.]

# பிறவிக்கடல் நீந்தபிரான்

[சே. சிவஞானம் பிள்ளை]

(இதழ் 4, 112-ம் பக்கத் தொடர்ச்சி)

(11) நாம் இதுகாறும் கூறியவாற்ருல் நமது பிறவிக்கடல் நீந்த பிராணுகிய வாகீசப் பெருந்தகையார்க்கு, இறைவன் அவரைச் சூலை நோய் மடுத்தாண்டு, திருநாவுக்கரசர் என்னும் பெயர் சூட்டினதாகத் தெரியவருகிறது. அப்பெருந்தகையார் திருநாமங்கள் எவை எவை என்பதைச் சிறிது ஆராய்வாம். அவருக்கு அவர் தாய் தந்தையர் இட்டபெயர் மருள் நீக்கியார் என்பது. மருள் - உலக மயக்கத்தை, நீக்கியார் - அகற்றியவர். திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளிய இறைவன் சூட்டிய பெயர் திருநாவுக்கரசர் என்பது. திரு+நாவுக்கு+அரசர் என்னும் மூன்று சொற்களிளுலாய ஒரு தொடர்மொழி. திரு என்பதனுக்கு இங்கே அருட்செல்வம் மேன்மை பெருமை என்பன பொருள். நாவுக்கு என்பதனுக்குத் தேவாரம் என்பது பொருள். அது நாவினிடத்தினின்று உண்டாகும் சொற்களுக்கு ஆகுபெயராய் அச்சொற்களினுலாய அன்புடைய தேவாரப் பாடல்களைக் குறித்து நிற்றலின் இருமடியாகு பெயர். அரசர் என்பதனுக்குத் தலைவர், வல்லவர் என்பன பொருள். எனவே அருட்செல்வம் வாய்ந்த (அல்லது மேன்மை பொருந்திய) அன்பான பாடல்களைப் பாடுவதில் வல்லவர் (அல்லது தலைவர்) என்பது பொருள்.

வாகீசர் என்பது வாக்+ஈசர் என்னும் இரண்டு வடமொழி களினுலாய ஒரு தொடர்மொழி. வாக் என்பதனுக்கு மேலே கூறியபடி அன்பான பாடல்கள் என்பது பொருள். ஈசர் - தலைவர். எனவே அன்பான பாடல்களைப் பாடுவதில் வல்ல தலைவர் என்பது பொருள். வாகிசர் என்பதனுக்கு சொல் வேந்தர் என்று கூறுதல் பொருத்தமுடைத்துப் போலும். இதுவேயன்றி இம்மருள் நீக்கியார் முற்பிறப்பில் வாகீசர் என்னும் பெயருடைய பக்தாாக விளங்கினுர் என்று கூறுதலும் ஒன்று. இதனைத் 'திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின்நெறி வாழ-வருஞானத் தவமுனிவர் வாகீசர்' என்றும் 'உன் உடன் பிறந்தான் - முன்னமே முனியாகி எனையடையத் தவ

முயன்றுன் ' என்றும் வரும் அருண்மொழித் தேவர் திருவாக்குகளே வலி யுறுத்தும்.

ஆளுடைய அரசர் - ஆளப்படுதலையுடைய தலைவர். ஆளப்படுதல் - பண்டைப் பேத நிலை நீங்குமாறு பர ஞானத்தால் ஒற்றுமை செய்யப் படுதல்.

அப்பர் என்பதனுக்குத் தந்தையார் என்பது பொருள். இப்பெயர் இவ ருக்கு நமது திருஞானசம்பமூர்த்தி நாயனுரால் இடப்பட்ட பெயராகும். இதனைப் ' பணிந்தவர்தம் கரங்கள் பற்றி எழுதரிய மலர்க் கையால் எடுத் திறைஞ்சிவிடையின்மேல் வருவார் தம்மை அழுதழைத்துக் கொண்டவர் தாம் அப்பரே யென அவரும் அடியேன் என்றுர்' என்னும் அருண்மொழித் தேவர் திருவாக்குச் சான்று பகரும்.

தாண்டக வேந்தர். திருத்தாண்டகம் என்னும் பாட்டுக்களால் ஏழை பங்காளராம் சிவபாஞ்சுடரைத் துதித்தலில் வல்லவர் என்பது பொருள். தாண்டகம் என்பது ஒவ்வோரடியும் இருபத்தாறு எழுத்தின் மிக்கு வர நான் கடியாற் பாடும் பாட்டு.

(12) அகச்சான்று :—நமது வாகீசப் பெருந்தகையாருக்கு வழங்கும் திரு நாமங்களின் பொருளை ஒருவாறு எடுத்துரைத்தாம். அவரைத் திரு வீரட்டானத்தமர்ந்த செங்கனக வரைச்சிலையார் ஆண்டமைக்கு அவர் திரு வாய் மலர்ந்த தேவாரங்களில் காணப்படும் அகச்சான்றுகள் யாவை என் பதனைச் சற்றே ஆராய்வாம். இறைவன் இவர் பால் சூலை நோய் மடுத் தமையை ' என் வயிற்றினகம்படியே பறித்துப் புரட்டி யறுத்து ஈர்த்திட நான் அயர்ந்தேன் அதிகைக் கெடில வீரட்டானத்துறை யம்மானே' என்று தாம் திருவாய் மலர்ந்திருக்கின்றமையே வலியுறுத்தும். சமண் சமயத்தி லிருந்து இவரை மீட்டு ஆண்டமைக்கு (1) 'நாயேன் முன்னைப் - பந்தமறுத் தாளாக்கிப் பணி கொண்டாங்கே - பன்னிய நற்றமிழ் மாலை பாடுவித் தென் - சிந்தை மயக்கறுத்த திருவருளினானை '! என்றும் ' அமணரோடே காதலித்தாய் கட்ட நோய் பிணி தீர்த்தாய்' என்றும் திருவாய் மலர்ந்திருப் பவைகளே போதிய சான்றாகும்.

நமது ஆளுடைய அரசர் சமண் சமயம் புக்கு அங்கே சிலகாலம் தங்கி மீட்டும் சைவ சமயம் சார்ந்தமையே அவர்க்கு கங்கை சடைமுடி தரித்த பெருமானர் மாட்டெழுந்த பெருங்காதற்குக் காரணம் என்பதனை,

“ ஊர்ந்து வருமிள வேறுடையான் றனுளத்தருளால்
சார்ந்து சமண்விட்டுறு முனக்கேவருஞ் சைவநலம்
கூர்ந்து மிளிர்தரும் நாவரசே நல்குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க்கே சிறந்தோங்குறுஞ் செல்வமுமே ”

என்று சிவாநுபூதிச் செல்வராகிய துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் விளக்கியுள்ளார்கள்.

### தழலின் நீறு தடாகமதாதல்

(13) திருநாவுக்கரசர் சமண் சமயத்தைவிட்டு நீங்கி சைவசமயம் சார்ந்து திருப்பணிசெய்து கொண்டிருப்பதை உணர்ந்த அமணர்கள் யாவ

ரும் ஒருங்குகூடித் தங்கள் அரசன்பாற் சென்று, 'தருமசேனர் பொய் வருத்துச் சூலை நோய் நீங்கவில்லை என்று புகன்று சைவசமயஞ் சார்ந்து நம்முடைய மதத்தை இழித்துச் சென்றனர்' என்று புகன்றனர். அடிகண் மார் புகன்றவைகளைக்கேட்ட மகேந்திர வர்ம பல்லவன் என்னும் அரசர் பெருமான், 'என் செய்வது'? என்றனன். அடிகண்மார், 'அவனைத் துன் புறுத்தவேண்டும்' என்றனர். அரசன், 'தீயோனைச் செறுதற்குக் கொண்டு வருக' என்றனன். மந்திரிமார் திருநாவுக்கரசர்பாற் சென்று அரசன் கட்ட ளையை அறிவித்தனர். அவர் 'நாமார்க்குங் குடியல்லோம்' என்னும் திருப் பதிகத்தைப் பாடி மறுமாற்றஞ் செய்தனர். அமைச்சர்கள் மீண்டும் அவ ரைப் பிரார்த்திக்க அவர் 'ஈண்டுவரும் வினைகளுக்கு எம்பிரான் உளன்' என்று துணிந்து அவர்களுடன் பல்லவ அரசன் பாற் சென்றனர். அரசன் சமணர்களை நோக்கி, 'இவனை யாது செய்வது?' என்று கேட்டனன். அம ணர்கள் வாகீசரை நீற்றறையிலிடப் புகன்றார்கள், ஏவலர்கள் வாகீசரை நீற் றறையிலிட்டார்கள். அப்போது நமது வாகீசப் பெருந்தகையார் யாது செய்தனர் எனின்,

"ஆண்டஅரசு அதன்அகத்துள் அணைந்தபொழுது அம்பலத்துத்
தாண்டவமுன் புரிந்தருளுந் தாள்நிழலைத் தலைக்கொண்டே
ஈண்டுவரும் துயர்உளவோ ஈசன்அடி யார்க்குஎன்று
மூண்டமன நேர்நோக்கி முதல்வனையே தொழுதுஇருந்தார்"

அமணர் செய்த கொடுஞ்செய்கைக்குச் சிறிதும் அஞ்சாது இறைவன் திருவடியைச் சிந்தித்துக் கொண்டே யிருந்த ஆளுடைய அரசர்க்கு அந் நீற்றறை எவ்வாறு இருந்ததெனின்,

"வெய்யநீற்று அறையதுதான் வீங்குஇள வேனிற்பருவம்
தைவருதண் தென்றல்அலை தண்கழுநீர்த் தடம்போன்று
மெய்யொளிவெண் நிலவலர்ந்து முரன்றயாழ் ஒலியினதாய்
ஐயர்திருவடி நீழல் அருளாகிக் குளிர்ந்ததே"

ஆனந்த வெள்ளத்திடை யழுந்தி வாகீசர் யாதொரு தீங்குமின்றி நீற் றறையுள் தங்கியிருந்தார். ஏழு நாள் கழிந்த பின்னர் மகேந்திர வர்ம பல்ல வன் அமணர்களை அழைத்து நீற்றறையைத் திறந்துபார்க்கும்படி கட்டளை யிட்டனன். அமணர்கள் நீற்றறையைத் திறந்து பார்த்தபோது, வாகீசர்,

"ஆனந்த வெள்ளத்திடை மூழ்கி அம்பலவர்
தேனுந்து மலர்ப்பாதத்து அமுதுண்டு தெளிவுஎய்தி
ஊனந்தா னிலராகி உவந்திருந்தார் தமைக்கண்டு
ஈனம் தங்கியது இலதாம்என்ன அதிசயம்"

என்றார்கள். வாகீசர் யாதொரு ஈனமும் இல்லாமல் இருப்பதைக்கண்ட சம ணர்கள், 'ஈனமில்லாமல் இருப்பது ஓர் அதிசயம் அன்று, இவர் நம்முடைய சமயத்தில் கற்றுக்கொண்ட மந்திர வலியால் யாதொரு தீங்கும் வாராமல் உயிர் பிழைத்துக் கொண்டார்' என்று பகர்ந்தார்கள்.

(14) அகச்சான்று நமது வாகீசப்பெருந்தகையார் நீற்று அறையிலிருக் கும்போது திருவாய்மலர்ந்த 'மாசில் வீணையும் மாலை மதியமும்' என்னும்

திருப்பதிகத்தில் உள்ள பத்துப் பாசுரங்களில் ஒன்றனிலாவது தமக்கு நேர்ந்த இடுக்கணை அகற்றுமாறு இறைவனை வேண்டியதாகக் காணவில்லை. 'மாசில் வீணையும், மாலை மதியமும், வீசு தென்றலும், வீங்கு இளவேனிலும், மூசுவண்டறை பொய்கையும் போன்றதே, ஈசன் எந்தை இணையடி நீழலே' என்று திருவாய் மலர்ந்தது, நீற்றறையானது இறைவன் திருவருளால் அவ்வாறு குளிர்ந்திருந்தது என்பதைக் குறிப்பித்ததாகக் கொள்ளலாம். இவை போன்றன எல்லாம் 'இறைவனார் எம்பிரானார் எத்துவார் இடர்கள் தீர்ப்பார்' என்னும் தேவாரத்தில் அடங்கும் போலும்.

நஞ்சு அமுதமாக விளைதல்

(15) நீற்றறையில் ஈனமில்லாமல் உய்ந்து எழுந்த வாகீசப் பெருந்தகையார்க்கு மகேந்திர வர்ம பல்லவன் நஞ்சூட்டும்படிப் புகன்றனன். அமணர்கள் விடங்கலந்த பாலடிசிலை அமுது செயப் பண்ணினார்கள். நமது வாகீசர்,

"நஞ்சு அமுதாம் எங்கள் நாதர்அடியார்க்கு என்று
வஞ்சம்மிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளக்குந் திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமணர் இடுவித்தபால் அடிசில்மிசைந்து இருந்தார்"

நஞ்சுகலந்த பாலடிசிலை அமுதுசெய்து யாதொரு தீங்குமின்றி இருந்தார் வாகீசர். நஞ்சுண்டும் வாகீசர் எவ்வாறு உயிர்ப்பிழைத்திருந்தார் என்பதை எம்போலிய அறிவிலிகள்கண்டு மயங்கா வண்ணம் நமது அருண்மொழித் தேவரே,

"பொடியார்க்குந் திருமேனிப் புனிதர்க்குப் புவனங்கள்
முடிவாக்குந் துயர்நீங்க முன்னைவிடம் அமுதானால்
படியார்க்கும் அறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சுஅமுத மாவதுதான் அற்புதமோ"

என்று விளக்கியுள்ளார். நஞ்சு கலந்த பாற்சோற்றை உண்டும் வாகீசர் பிழைத்திருப்பதைக்கண்ட அமணர்கள் மனம் வருந்தினார்கள்.

அகச்சான்று நஞ்சு அமுதம் ஆம்படி வாகீசர் பாடியருளிய தேவாரப் பதிகம் கிடைத்திலது. அது சிதலமானவற்றிற் சேர்ந்தது போலும். நஞ்சு அமுதமானது,

"அஞ்சிருள் காலமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத்து ஓதிநாளும் அரன்அடிக்கு அன்பதாகும்
வஞ்சனைப்பாற் சோறாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சு அமுதாக்கி வைத்தார் நனிபள்ளி அடிகளாரே"

என்னும் தேவாரத்தால் புலனாகின்றது. இவ்வற்புதத்தை,

"பாலிடை நஞ்சங்கண்டு பதைபதைத் தோடிஓர்பால்
தாலிடையவரே உண்ண நவன்றமாலயன் உள்நாணப்
பாலிடை நஞ்சங்கண்டு பதைபதைப்பின்றித்தாம் உண்டுஓர்பால்
தாலிடை யவரேஎன்னப் பொலியுநோன்மையர் தாள்போற்றி"

என்று வியந்து துதித்திருப்பது பெரிதும் பாராட்டற்பாலதாம்.

## கொல்லவந்த யானை குனிந்து பணிதல்

(16) நீற்றறையிலிட்டும், நஞ்சுகலந் தூட்டியும் இறவாது வாகீசர் பிழைத்தமையைக் கண்ட அமணர்கள் நெஞ்சம் பொருமாய் அவரைக் கொல்லும்படிப் பட்டத்து யானையை அவர்மேல் ஏவினார்கள். யானை தம்மேல் வரக்கண்ட வாகீசர், சிவத்திருவடியைச் சிந்தித்து, 'சுண்ணவெண் சந்தனச் சாந்து' என்னும் தேவாரத் திருப்பதிகம் பாடி ஒவ்வொரு பாசுரத்தின் ஈற்றிலும், 'கெடிலப்புனலுடையார் அவர் தமர் நாம் அஞ்சுவது யாதொன்று மில்லை அஞ்சவருவதுமில்லை' என்று திருவாய் மலர்ந்தருளி சிவபெருமானைத் தியானித்துக்கொண்டு வாளாவிருந்தனர். அவர் மேல்வந்த யானை எண் திசையோர்களும் காண அவரை இறைஞ்சி எழுந்தது. இவ்வாறு இறைஞ்சி எழுந்த யானையைப் பாகர் மீட்டும் வாகீசப் பெருந்தகையாரைக் கொல்லும்படி ஏவினர். அவ்வியானை, ஏவிய பாகர்களையே கொல்லத் தலைப்பட்டது.

அகச்சான்று :—வாகீசர், தாம் பாடிய 'சுண்ணவெண் சந்தனச் சாந்து' என்னும் திருப்பதிகத்தில் தம்மைக் கொல்ல வந்த யானையை அகற்றும்படி வேண்டிக் கொண்டதாக வெளிப்படையாகக் கூறவில்லை. 'அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை' என்று பாடியது தம்மேல்வரும் யானையைக் குறித்துக் கூறினதாகக் கொள்ளலாம். இதுவேயன்றி,

" அன்பனை யடியாரிடர் நீக்கியைச் செம்பொனைத் திகழுந் திருக்கச்சியே
கம்பனைக் கடுவாய்க்கரைத் தென்புத்தூர் நம்பனைக்கண்டு நான்உய்யப் பெற்றேனே "

என்னும் தேவாரமும் இவ்வற்புதத்திற்குச் சான்று பகர்வதாகக் கொள்ளலாம்.

## வாரியிற் கல் மிதத்தல்

(17) நீற்றறையிலிடல், நஞ்சுண்பித்தல், யானையாலிடறச் செய்தல் ஆகிய இவையிற்றால் வாகீசர் யாதொரு ஊனமும் இல்லாதிருந்தமையைக் கண்ட அமணர்கள் அரசைக் கடலில் பாய்ச்சும்படி அரசனுக்குப் போதித்தார்கள். அரசனும் அவ்வாறே கட்டளையிட்டனன். மன்னவன் கட்டளைப்படி முடித்தார் பதகர். அமணர் தம்மைக் கல்லிடைப் பிணித்துக் கடலுட் பாய்ச்சியதைக்கண்ட வாகீசப் பெருந்தகையார்,

" எப்பரிசாயினும்ஆக ஏத்துவன் எந்தையை என்று
சிவனஞ் செழுத்தைத் துதிப் பாராய் "

'சொற்றுணை வேதியன்' என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினர். பதிகம் பாடிய அளவில் அவரைப் பிணித்திருந்த பெருங் கல்லும் அரசு மேற் கொள்ளத் தெப்பமாக மிதந்தது. மெய்ப்பெருந் தொண்டர் அக் கல்லின்மேல் விளங்கித் தோன்றினர். வருணன் கல்லையே சிவிகையாகச் சுமந்துவந்து திருப்பாதிரிப்புலியூரின் பக்கல்சேர்ப்பித்தனன். அப்பதியின் கண் உள்ள தொண்டர்கள் நமது வாகீசப் பெருந்தகையாரை அன்புடன் வரவேற்றார்கள். தம்மைஎதிர்கொண்டழைத்த தொண்டர்களுடன் திருப்பாதிரிப்புலியூரைச் சார்ந்து அங்கே திருக்கோயில் கொண்டருளியிருக்கும் தோன்றாத் துணையாரை வணங்கி, ஈன்றாளுமாய் என்னும் திருப்பதிகம்

பாடி அங்கேயே சில நாள் தங்கியிருந்தார் அப்பர் சுவாமிகள். கடலுள் பாய்ச்சப்பட்ட கல் எவ்வாறு மிதந்தது என்று எம்போலிய மந்தமதிகள் மயங்காவண்ணம் சேக்கிழார் பெருமானே,

"இருவினைப் பாசம் மும்மலக் கல்லார்த்தலின்
வருபவக் கடலில் வீழ்மாக்கள் ஏறிட
அருளும்மெய் அஞ்செழுத்து அரசை இக்கடல்
ஒருகன்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ"

என்று சமாதானங் கூறிப் போந்தனர்.

அகச்சான்று "கற்றுணைப் பூட்டியோர் கடலுட் பாய்ச்சினும், நற்றுணை யாவது நமச்சிவாயவே" என்னும் திருவாக்கால் சமணர்கள் அப்பர் சுவாமிகளைக் கடலில் இட்டமை விளக்கமாகின்றது. அவர் கரையேறி உய்ந்தமையை,

"கல்லினோ டெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக் குடியான்
நல்ல நாமம் நவிற்றியுய்ந்தேன் அன்றே"

என்னும் தேவாரப் பாடல் விளக்கும்.

நம்பர் அருளாமையினால் அருகக்கடல் புக்க வாகீசப் பெருந்தகையார் அக்கடலைக் கடந்து ஏறியதோ, அவர்கள் கற்றூணிற் பிணித்துப் பாய்ச்சிய பெருங்கடல் கடந்து ஏறியதோ எது அரிது என்பதை எனக்கு விளக்கு என்று வினவுவார் போன்று,

"அருகக்கடல் கடந்தேறியதோ சிலையம்பி யெனப்
பெருகக்கடல் கடந்தேறியதோ சொல்பெரு மிடறு
கருகக்கடல் விடமுண்டோ னடியிற் கசிந்துமனம்
உருகக்கட லன்புபெற்ற சொல்வேந்த உனக்கரிதே"

என்று சிவப்பிரகாச சுவாமிகள் துதித்திருப்பது ஆராயற்பாலதாம். வாகீசப் பெருந்தகையாரை வணங்கி முத்திபெற விரும்புவோர் வழிபட வேண்டியது இது என்பதனை,

"பாட்டான் மறைபுகழும் பிறைசூடியைப் பாடிமகிழ்
வீட்டா மகிழ்சொல் விறைவனைப்பாடி உவப்புறுக்க
வேட்டால் மலிபெருங் கல்லவன்போல மிதப்பனெனப்
பூட்டா மறிதிரை வார்கடற்கேவிழப் போதுவனே"

என்று துதித்திருப்பதும் வியக்கத்தக்கதே. இவ்விழுமிய அற்புதத்தினைப் பிற்காலத்துத் தமிழர் சிகாமணி ஒருவர் கீழ் வருமாறு துதித்துப் போற்றியிருக்கிறார் :—

"எழுபது வெள்ளஞ்சேனை எடுத்திடு பலகற்கொண்டு
செழுமணிப் பாவையொன்றே கடந்தவெஞ்சிலை யோன்காண
வழுவமண் இடுகல்ஒன்றால் மறிகடல் பிறவிவேலை
முழுவதுங் கடந்தஎங்கள் முதல்வனுக்கு அன்புசெய்வாம்."

